


பார்த்தறியாப் புதுமை. பரவசக் கிளுகிளுப்பு.
லிரில். அலையெறியும் தளதள பச்சை..அதன்
நவமோ குளுகுளு எலுமிச்சை...புதுக்
குமரியாய் உங்களைப் பூரித்தெழ வைக்கும்.

**லிரில்**
புத்துணர்வு சோப்

**மனம்குளிரும் எலுமிச்சைப் புத்துணர்ச்சி வெள்ளம்.**

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு.

லின்டாஸ்-LR.27-203 TM




# கல்கி

1977 மே 1
பிங்கள ௵
சித்திரை 19


"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.


**கல்கி சந்தா**

| | ஒரு வருடம் ரூ.பை | ஆறு மாதம் ரூ.பை |
|---|---|---|
| இந்தியா | 38.00 | 19.00 |
| இலங்கை (இலங்கை நாணயப்படி) | 38.00 | 19.00 |
| வெளிநாடுகள் | 90.00 | 45.00 |


### ராஜாஜி சிந்தனை

## ஆராய்ச்சியின் வரம்பு

பௌதிக சாஸ்திரங்களில் ஆராய்ச்சியின் வரம்பை ஒவ்வொரு விஷயத்திலும் காணலாம். எந்த விஷயத்தை எடுத்துச் சோதித்தாலும் ஓர் அளவுக்கு மேல் உண்மையை அறிய முடியாது. கிணறு வெட்டும்போது பாறை கண்டால் வெட்டுவதை நிறுத்த வேண்டுவது போல் எந்த ஆராய்ச்சியிலும் ஓரளவு ஆழ்ந்து சென்ற பின் மனிதனுடைய புத்திக்கு மிஞ்சிய பாறையின் மேல் மனிதன் மூளை மோதுகிறது. அதுவே எல்லை. வேதாந்த சம்பந்தம் இல்லாத யதார்த்த சாஸ்திர ஆராய்ச்சியிலும் கணித சாஸ்திரத்திலும் இந்த எல்லையின் மேல் ஆங்காங்கு மோதுகிறோம். நாம் கண்டதும் காணக் கூடியதும் பாலின் மேல் படிந்திருக்கும் ஆடையின் அளவே. அதன் கீழ் என்றென்றும் காண முடியாத ரகசியம் ஒன்று கிடக்கிறது. இவ்விதம் சாதாரண சோதனைகளுக்கு அகப்படாத ரகசியத்தைப் பற்றித்தான் வேதம், உபநிஷத்து, கீதை முதலிய சமய நூல்களும் தரும நூல்களும் முனிவர்களுடைய வசனங்களும் பக்தர்களுடைய வாழ்க்கைச் சரிதங்களும் விவகரிக்கின்றன.

— *கண்ணன் காட்டிய வழி*












ஸ்ரீமதி இந்திரா காந்தி ஆட்சி நடத்தபோது, பாரத நாட்டில் இரண்டு ராஜ்யங்களில்தான் காங்கிரஸ் அல்லாத ஆட்சி நிலவியது. தமிழகத்தில் தி. மு. க. ஆட்சி; மகாராஷ்டிர கோமண்டக் ஆட்சி கோவாவில். தி. மு. க. வுடன் கூட்டுச் சேர்ந்து அதனை ஆட்சியில் நிறுத்தியதே இந்திரா காங்கிரஸ்தான் – 1971ம் ஆண்டு தேர்தலில். பிறகுதான் தி.மு.க. வுடன் உறவு முறித்துக் கொண்டது. அப்படியல்ல கோவாவின் எம். ஜி. கட்சி. காங்கிரசுக்கு எதிர்க் கட்சியாகத்தான் தொடங்கியது. இன்றுவரை அப்படியே இருந்து வருகிறது.

கோவாவில் ஸ்ரீமதி சசிகலா ககோட்கர் மீது காங்கிரஸ் எவ்வளவோ அபாண்டங்களை யெல்லாம் ஏற்றி அவரை அப்புறப் படுத்த முயன்றது, ஸ்ரீமதி இந்திரா காந்தியாலேயே முடியவில்லை. இப்பொழுது நடைபெற்ற மக்கள் சபை தேர்தலிலும் காங்கிரஸ் தோற்று ஆளும் கட்சியான எம். ஜி. கட்சி உறுப்பினரான திரு அம்ருத் கன்ஸார் வெற்றி பெற்றிருக்கிறார். இதிலிருந்து ஆளும் கட்சி செல்வாக்குடன் இருந்து வருகிறது. ஸ்ரீமதி சசிகலா காகோட்கர் ஆட்சிக்குப் பொது மக்களின் ஆதரவு இருக்கிறது என்று புரிகிறதல்லவா!

கோவா எல்லையை அணுகும்போதே கேரளத்துக்குள் வந்து விட்டோமோ என்ற எண்ணம்தான் உண்டாகும். தோப்பும் துரவும் மலையும் சரிவும் அப்படி மயங்கச் செய்யும். ஆனால் அங்கு பெண்கள் கவுன் அணிந்து நடமாடி வருவதைப் பார்த்ததும் கேரளமல்ல கோவா என்பது உறுதிப்படும்.

கோவா, போர்ச்சுகீசியர் ஆளுகையில் 450 ஆண்டுகள் இருந்து 1961-ம் ஆண்டு டிசம்பரில் விடுதலையடைந்தது. பாரத சர்க்காரின் ராணுவ நடவடிக்கை அதற்கு உதவியது.

போர்ச்சுகீசியர் கத்தோலிக்க மதத்தைச் சேர்ந்தவர்கள். ரோமில் இருக்கும் போப்தான் அவர்களுக்கு முதல் மத குரு. ரோமாபுரி சிற்ப சித்திர வேலைப்பாடுகள் கொண்ட சர்ச்சுகளுக்குப் பெயர் போனது. போர்ச்சுகீசியர், கோவாவையும் அவ்வளவு உயர்ந்த நிலைக்குக் கொண்டு வந்தனர். போர்ச்சுகீசியர் மிக உன்னத நிலையில் இருந்த காலத்தில் கோவாவில் தொண்ணூறு சர்ச்சுகள் இருந்தனவாம். இப்பொழுது கணிசமாகக் குறைந்து விட்டன. எனினும் மிகவும் எழில் வாய்ந்த சர்ச்சுகள் இன்னும் இருக்கின்றன. அவற்றில் மிக முக்கியமானது, 'பாஸிலிக்கா, பாம் ஜீஸஸ்' என்பதாகும். இந்த ஏசுநாதரின் அரண்மனை உண்மையிலேயே மிகப் பெரியது. பாஸிலிக்கா என்றாலே அரண்மனையாகும். இங்கு, ஞானி பிரான்ஸிஸ் லேவியரின் புனித உடல் ஒரு பெரும் பெட்டியில் வைக்கப்பட்டுள்ளது. அதனைப் பத்தாண்டுகளுக்கு ஒரு முறை பக்தர்களின் தரிசனத்துக்காக வெளியில் எடுக்கிறார்கள். அப்போது உலகெங்கிலுமுள்ள கத்தோலிக்க கிறிஸ்தவர்கள் கோவாவில் குழுமுகின்றனர். இந்த அற்புத மாதாகோவிலை வாழ்க்கையில் ஒரு முறையேனும் அனைவரும் பார்த்துவிட வேண்டியதுதான்.

மேலே:

- பிரியாலிலுள்ள மங்கேஷ் கோயில்.
- நேரு பாலத்திலிருந்து பணஜி நகர் அளிக்கும் தோற்றம்.

கீழே:

- டோனாபௌலாவில் சூரியாஸ்தமனம்.
- பழைய கோவாவில் பாஸிலிக்கா பாம் ஜீஸஸ்.
- ஸ்ரீமதி சசிகலா ககோட்கர் - கோவா முதல் மந்திரி.





மேற்குக் கடற்கரையோரமுள்ள கோவா, பல ஊர்கள் இணைந்த பிரதேசமாகும். தலைநகர் பணஜி. இதனைப் பஞ்சிம் என்றும் சொல்கிறார்கள். இங்குதான் சர்க்கார் அலுவலகங்கள் இருக்கின்றன. கோவா – டையு – டாமன் ஆகியவற்றின் தலைநகரம் இந்தப் பணஜிதான்.

பணஜி தெருக்கள் அகலமாக இருக்கும். ஊரின் நடுவே மாண்டோவி என்ற ஆறு ஓடும். அதில் உல்லாசப் படகுகளும், பொருட்கள் ஏற்றிச் செல்லும் படகுகளும் காணலாம். ஆற்றின் கரையில் பெஞ்சுகள் இருக்கின்றன. சாவகாசமாக உட்கார்ந்து வீடுகளிலிருந்து வரும் மேற்கத்திய இசையைக் கேட்டுப் பொழுது போக்கலாம். மதுபானக் கடைகள் ஏராளம். ஆனால் யாரும் தெருவில் தள்ளாடி விழுவதையோ, இரைந்து சத்தம் போட்டு ஆர்ப்பாட்டம் செய்வதையோ பார்க்க முடியாது. இதைப் பற்றிக் கோவாவில் ஒரு தென்னிந்தியக் குடும்பத்தாருடன் பேசிக் கொண்டிருந்த போது, ''நம்ப பக்கங்களிலிருந்து வருபவர்கள்தாம் மிதமிஞ்சிக் குடித்து விட்டுத் தாறுமாறாக நடந்து கொண்டு விடுவார்கள். நமக்கு ரொம்ப அவமானமாக இருக்கும்'' என்று அந்த வீட்டின் இளம் பெண் கூறினாள். கேரளத்தைப் போலவே இங்கு முந்திரிச் செடிகள் அதிகம். முந்திரிப் பழத்திலிருந்து இங்கு ஒருவகை மது தயாரிக்கிறார்கள். மிகுந்த போதை தரக்கூடியதாம். உலக மார்க்கெட்டில் ஏக கிராக்கியாம்.

கோவாவின் முக்கியமான ஏற்றுமதி வர்த்தகம் இரும்பு கனிப்பொருள் – பார்க்கப்போனால் மண்தான். இங்கிருந்து அதாவது மர்மகோவா துறைமுகத்திலிருந்து ஆண்டுக்குப் பதின்மூன்றாயிரம் டன் ஏற்றுமதி செய்து அறுபத்துநான்கு கோடி ரூபாய் பெறுமானமுள்ள அந்நியச் செலாவணி சம்பாதிக்கிறது. இவ்வளவு முக்கிய ஏற்றுமதி வர்த்தகம் நடைபெறும் மர்மகோவா துறைமுகத்தில் கப்பல் நிற்கக் கூடிய கடல் ஆழம் முன்பு 22 அடியாகத்தான் இருந்தது. அதை இப்பொழுது அபிவிருத்தி செய்து 26 அடி ஆழமாக்கியுள்ளார்கள். 35 அடிக்கு ஆழப்படுத்த வேண்டும் என்று திட்டமிட்டு வேலை செய்து வருகிறார்கள். இந்தத் திட்டம் முடிந்தால், பெரிய பெரிய கப்பல்கள் வந்து நமது ஏற்றுமதி வர்த்தகம் கணிசமாகப் பெருகும்.

கோவாவில் அடுத்த முக்கியமான வியாபாரம் மீன். ஆற்று மீனும் கடல் மீனும் ஏராளமாகக் கிடைக்கின்றன. மீன் வளர்ப்பு கார்ப்பரேஷனும் இருக்கிறது. மர்ம கோவா பகுதிக்குப் போய் விட்டால் போதும். மீன் நாற்றம் மூக்கைத் துளைத்து விடும். செம்படவப் பெண்கள் சேலையை முழங்காலுக்கு மேல் தார்ப்பாய்ச்சிக் கட்டிக் கொண்டு, தலை மீது கூடையில் பெரிய பெரிய மீன்களை அலட்சியமாகத் தூக்கிச் செல்வதைப் பார்க்கலாம். கோவாவின் ஏழைகளுக்கு, விவசாயத்துக்கு அடுத்தாற்போல் மீன் வளர்ப்பும் வியாபாரமும்தான் முக்கியமான தொழில். அவர்கள் சாப்பாட்டிலும் அரிசியும் மீனும் முக்கியமான அம்சங்கள்.

இங்கு காங்கிரஸ் சார்புள்ள படித்த மக்களிடையே பேசினால், இப்பொழுது ஆளும் கட்சியையும், முதல்வர் ஸ்ரீமதி காகோட்கரையும் தாக்கிப் பேசுவார்கள். 'மத்திய அரசு இங்கு பெரும் தொழிற்கூடங்கள் ஏற்படுத்தக் கோடிக்கணக்கான ரூபாய் முதலீடு செய்ய முன் வந்தது; முதல்வர் ஸ்ரீமதி சசிகலா ஆற்று நீரும், கடல் நீரும் கெட்டு விடும்; ஆகவே வேண்டாம் என்று மறுத்து விட்டார்' என்று சொல்வார்கள். ஆனால் ஒரு கணம் யோசித்தால்





எஸ்.பி.எஸ்

# இலக்கிய சாதனை!



சமுத்திரம்

"இலக்கிய சிந்தனை" ஆண்டு விழாவில் 1976ம் ஆண்டின் சிறந்த சிறுகதைக்காகப் பரிசு பெற்ற திரு சமுத்திரம்; சிறந்த நாவலுக்காகப் பரிசு பெற்ற திரு விட்டல் ராவ். சமுத்திரத்தின் சிறுகதை முன்பு குமுதத்தில் பிரசுரமாகித் தற்போது இலக்கிய சிந்தனை சார்பில் வானதி பதிப்பகம் வெளியிட்டுள்ள சிறுகதைத் தொகுப்பில் இடம் பெற்றுள்ளது. விட்டல் ராவின் நாவல் இனிதான் பிரசுரமாக வேண்டும். பரிசு பெற்ற இருவருக்கும் வாழ்த்துக்கள்.



விட்டல் ராவ்

அரசு செய்த முடிவு சரியென்று ஒப்புக் கொள்வீர்கள். இங்கு அறுபது கோடி ரூபாய் அம்மோனியா எரு உற்பத்திசாலை விருந்ததாம். இச் சாலையிலிருந்து வெளிப்பட்ட கழிவு நீரை ஆற்றிலும் சமுத்திரத்திலும் விடவே, ஆற்று நீர் மீன்களும் கடல்மீன்களும் ஆயிரக்கணக்கில் அழிந்து வந்தன. மீன் பிடிக்கும் தொழிலில் ஈடுபட்டிருக்கும் செம்படவக் குடும்பங்கள் அல்லலுற்றன. அதனால் அத் தொழிற் கூடத்தை மூட வேண்டியதாகி விட்டது. இந்த அநுபவத்துக்குப் பிறகு எந்த முதல்வர் சூழலைக் கெடுக்கும் தொழிற் சாலையை வரவேற்பார்?

மேலும் கோவா இயற்கையன்னையின் பூரண எழில் கொஞ்சும் இடம். அதன் வன வளமும், நீர்வளமும் மலைவளமும் கடல் வளமும் அல்லற்பட்டு ஆற்றாது தவிக்கும் உள்ளத்துக்கு அமைதியும் ஆனந்தமும் அளிக்க வல்லன. அதனாலேயே ஆண்டுதோறும் உல்லாசப் பயணிகள், யாத்திரிகர்கள் எண்ணிக்கை பெருகி வருகிறது. இந்த இயற்கை எழிலைப் பாழ்படுத்தும் தொழிற்கூடங்களைக் கோவா போன்ற சிறிய பிரதேசத்துக்குள் நுழைய விடாமல் தடுத்து வருவதற்கு முதல்வரைப் பாராட்டத்தான் வேண்டும்.

கோவா மக்கள் பேசும் மொழி, மராட்டிக்கும் கன்னடத்துக்கும் இடைப்பட்ட கொங்கிணி மொழி. இம் மொழிக்கென்று லிபி இல்லையாயினும், இம்மொழியைச் சிலர் ரோமன் லிபியிலும், தேவநாகரியிலும் எழுதுகிறார்கள். கோவாவில் ரோமன் லிபியில் வெளியாகும் கொங்கிணி மொழிப் பத்திரிகையையும் பார்த்தேன். கொங்கிணி மொழியில் நல்ல இலக்கியங்கள், நாட்டுப் பாடல்கள், நாடோடிக் கதைகள் எல்லாம் இருப்பதால் அதற்கு ஒரு தனி அந்தஸ்து வேண்டும் என்று கோரிப் பெற்றிருக்கிறார்கள். ஸாஹித்ய அகாடெமி கொங்கிணியை ஓர் இலக்கிய மொழி என்று அங்கீகரித்திருக்கிறது. ஆனால் கோவா அரசின் ஆட்சிமொழி ஆங்கிலமே.

கோவா மக்களின் சுவையான நாடோடிக் கதையொன்றை அங்கிருந்தபோது கேட்டேன்.

ஒருகாலத்தில் மிருகங்கள்கூட மனிதர்களைப் போல் பேசும் சக்தியும், மனிதர்களுக்கு இல்லாத எதிர் காலத்தை உணரும் தெய்வீக சக்தியும் பெற்றிருந்தனவாம்.

ஒருசமயம் ஒரு விவசாயி வேலி கட்டிக் கொண்டிருந்தானாம். அந்தப் பக்கமாகச் சென்று கொண்டிருந்த கழுதை, "என்னப்பா செய்து கொண்டிருக்கிறாய்?" என்று கேட்டதாம். விவசாயி, "வேலி கட்டிக் கொண்டிருக்கிறேன். சென்ற வருஷம் கட்டின வேலி மிக இலேசாக இருந்தது. ஆடு மாடுகளெல்லாம் வேலியைத் தள்ளி விட்டுப் பயிரை மேய்ந்து விட்டன. இப்போது கட்டுகிற வேலி மூன்று வருஷங்கள் தாங்கும்படி பலமாகக் கட்டிக்கொண்டிருக்கிறேன்" என்றானாம்.

இதைக் கேட்ட கழுதை இடிஇடி என்று சிரித்துவிட்டு, "நீயே இன்றிலிருந்து மூன்றாவது நாள் செத்துப்போகப் போகிறாய். மூன்று வருஷங்கள் நிற்கும்படியாக வேலி கட்டுகிறாயாக்கும்!" என்றது.

இதைப் பார்த்த கடவுள், மிருகங்களின் பேசும் சக்தியை அழித்து விட்டாராம்!

கோவாவில் இடறி விழுந்தால் வெளி நாட்டு ஹிப்பி மீதுதான் விழ வேண்டியிருக்கும் என்ற எண்ணத்தோடு போன எனக்குப் பெருத்த ஏமாற்றம்தான் ஏற்பட்டது. மாதிரிக்குக் கூட ஒரு ஹிப்பி கண்ணில் படவில்லை. எவ்வளவோ துருவித் துருவித் தேடிப் பார்த்தேன். கிடைக்கவில்லை. கோவா மலையும் கடலும் சார்ந்த இடம். சில இடங்களில் கடல் மலைகளுக்குள் புகுந்திருக்கும். அப்படி மலைகளுக்கிடையேயுள்ள ஒதுக்குப் புறமான கடற்கரைகளில் தான் ஹிப்பிகளைக் காணலாம். அக் கடற்கரைகள் நகரின் முக்கிய பகுதியிலிருந்து வெகு தூரத்திலிருக்கின்றன என்றார்கள். இப்பொழுது முன்னளவு ஹிப்பிகள் வருவதில்லை என்றும் கூறினார்கள்.

கோவா மக்களின் விவசாய நில உரிமை முறை, இந்நாட்டில் வேறெங்கும் காணமுடியாத முறையில் சமீப காலம் வரையில் இயங்கி வந்திருக்கிறது.

கோவா பகுதியிலுள்ள மிக வளமான நன்செய் நிலங்களை ஒரு சில குடும்பங்களே ஆதிகாலந் தொட்டே உரிமையாகக்கொண்டு கூட்டுறவு முறையில் விவசாயம் செய்து வந்திருக்கின்றன. ஆயிரம் ஆண்டுகளுக்கு

# இதோ! நீங்கள் துடிதுடிப்புடனும் ஊக்கத்துடனும் விளங்க சக்தியளிக்கும் எரிபொருள்.




# பூஸ்ட்

## மால்ட் சாக்லெட் மில்க் ட்ரிங்க்

ரயிலைப் போனறே ஒவ்வொரு நாளும் உங்களுக்கும் நல்ல துவக்கத்திறகு எரிபொருள் தேவை. ஆகையினால் தான் ஒவ்வொரு காலையும் உங்களுக்கு பூஸ்ட தேவை. உயர் சுறுசுறுப்புடன் உங்களை இயங்கச் செய்யும் சக்திப் பொருள். வேலையிலும் விளையாட்டிலும் அதிகச் சக்தியைச் செலவிடும் உங்கள் குழந்தைகளுக்கு இது முக்கியமாகத் தேவை.

அவர்களுக்கு பூஸ்ட்-மால்ட் சாக்லேட் பால் பானமளியுங்கள். ஊட்டத்தைப் பற்றி குறைவற அறிந்த ஹார்லிக்ஸ் செய்வோர் தருவது

சக்தி வளமான ஏடு நிறைந்த பூஸ்ட் உங்களுக்கு அதிகப் படியான ஊட்டமளிக்கிறது.

ஆடை நிறைந்த பால், கோதுமை, பார்லி மால்ட், கோக்கோ ஆகியவற்றினால் செய்யப் பட்டிருப்பதே இதற்குக் காரணம்.

பூஸ்டின் ஆடை நிறைந்த மால்ட் சாக்லேட் சுவையை உங்கள் குடும்பத்தினர் மிகவும் விரும்புவார்கள்.

பூஸ்ட், ஒரு நாளைத் துவக்குவதற்கு மிகச் சிறப்பான முறை—ஒவ்வொரு நாளும்
இரண்டு அளவுகளில் கிடைக்கும்.

**ஹார்லிக்ஸ் தயாரிப்பாளர்கள் அளிப்பது.**

B-4576 TAM 1

முன்னமேயே இந்தப் பழக்கம் இருந்திருக்கிறது. அதாவது, கோவாவில் செழிப்பான பூமியிருப்பதைக் கண்டு வெளியிலிருந்து வந்த மக்கள் அப்பூமியை ஆக்கிரமித்துக் கொண்டு, தங்கள் குடும்பத்தாருக்குள் பங்கிட்டுக் கொண்டு உழுது வந்திருக்கிறார்கள். இப்படி நில உடைமை பெற்றவர்களை ''கோவின்கர்கள்'' என்று அழைத்தார்கள். ஆயிரம் ஆண்டுகளுக்கு முன் இந்தக் கோவா பகுதியை ஆண்ட மன்னர்கள் கடம்ப மன்னர்கள். இம் மன்னர்கள் இந்தக் கோவின்கர்களின் உரிமையில் தலையிடவில்லை. முஸ்லிம் அரசர்களின் படையெடுப்புக்களிலிருந்து அவர்களுக்குப் பாதுகாப்பு அளித்தார்கள். ஆகவே இந்த நில உடைமையாளர்கள் தாங்களாகவே ஒரு கணிசமான தொகையைக் கடம்ப மன்னர்களுக்கு வரியாக அளித்தார்கள்.

இம்முறை போர்ச்சுகீசிய காலம் வரை தொடர்ந்து, ஏன் கோவா சுதந்திரம் அடைந்த பிறகும் பத்து ஆண்டுகள் வரை தொடர்ந்து இருந்து வந்திருக்கிறது. 1971-ம் ஆண்டுக்குப் பிறகு சரியான முறையில் நிலச் சீர்திருத்தம் நடந்து கம்யூனிடேட்ஸ் (Communidades) என்ற பத்தாம் பசலி முறை மாறி, உழுபவனுக்கு நிலம் உரிமையாக்கப்பட்டு வருகிறது.

கோவாவில் பல அறிந்த ஆலயங்கள் இருக்கின்றன. இங்குள்ள 'மங்கேஷ்' ஆலயம் — சிவன் கோவில் மிகவும் பிரசித்தம். இந்த ஊரைச் சேர்ந்தவரான பிரபல பின்னணிப் பாடகி லதாமங்கேஷ்கர் ஆண்டுதோறும் இக் கோவிலுக்கு விசேஷ பூஜைகள் நடத்துவதாகக் கேள்விப்பட்டேன்.

கோவா, மகாராஷ்டிர மாநிலத்துக்கு ஒட்டினாற்போல் இருப்பதால், சிலர் இதை மகாராஷ்டிர மாநிலத்தோடு இணைத்துவிட வேண்டும் என்று விரும்பினர். இதைப் பற்றிப் பொது மக்களின் அபிப்பிராயம் அறிய வோட்டெடுப்பு நடைபெற்றது. மக்கள் மகாராஷ்டிர மாநிலத்துடன் இணையக் கூடாது என்று தீர்ப்பளித்தனர்.

கோவாவில் இன்றும் போர்ச்சுகீசியமொழி பேசுபவர்கள் இருக்கிறார்கள் ஆகவே, அங்கே ஒரு தனியான பண்பாடு நிலவுகிறது. ஒருவித நிதானம், அமைதி எல்லாம் அங்கே காணலாம். அங்குள்ள மக்களுக்கு வேண்டிய காய்கறிகள் பெல்காமிலிருந்து வருகின்றன. உள்ளூர் கோவா மக்களுக்கு, கோவா சுதந்திரமடைந்ததிலிருந்து மராட்டியர்களின் ஆதிக்கம் அதிகமாகி விட்டது என்ற ஆதங்கம் உண்டு. ஒரு பகுதி முன்னேற வேண்டுமென்றால் வெளிப்பகுதி மக்களின் உதவியின்றி முடியாது. ஆகவே அவர்கள் கசப்புக்குப் பொருள் இல்லை என்று நினைத்துக் கொண்டேன்.

கோவாவை விட்டுப் புறப்படுமுன் முதன் மந்திரி ஸ்ரீமதி சசிகலா காகோட்கரைச் சந்தித்து விட்டுப் போகலாம் என்று அவர் இல்லத்துக்குச் சென்றேன். முதலில் மிக தயக்கத்துடன் பேசத் தொடங்கிய அம்மையார் பிறகு வெளிப்படையாகவே பல விஷயங்களைச் சொன்னார்.

''கோவா விடுதலை அடையக் காங்கிரஸ் கட்சி பெருதவி செய்திருக்க, இங்கே ஏன் காங்கிரஸ் செல்வாக்குப் பெறவில்லை?'' என்று கேட்டேன்.

''விடுதலை வாங்கித் தந்த காங்கிரஸ், விடுதலைக்குப் பிறகு, எந்தப் பணக்காரர்கள் இவ்விடத்திய ஏழைகளைக் கொடுமைப் படுத்தி வந்தார்களோ, அவர்களைக் கட்சியில் சேர்த்துக் கொண்டு வேட்பாளர்களாக நிறுத்தியது. மக்கள் அவர்களைக் கண்டு பொருமினார்கள். இந்த மக்களின் பரிதாப நிலை கண்டார் என் தகப்பனார், டி.பி. பண்டோத்கர். தம் தொழில் உண்டு தாம் உண்டு என்றிருந்த அவர் அரசியலில் குதித்து மகாராஷ்டிர கோமண்டக் கட்சியை நிறுவினார்'' என்று சுருக்கமாகச் சொன்னார்.

இன்றும் கோவானியர் டி. பி. பண்டோத்கருக்குப் பெரிதும் மதிப்பும் மரியாதையும் கொடுத்து வருகின்றனர்.

கோவா விஜயம் செய்பவர்கள் வித்தியாசமான சூழலில் உண்மையான மன நிறைவும் சாந்தியும் பெறுவார்கள். ஆகவே கோவாவின் தனித் தன்மை வாழ்க என்று வாழ்த்திக் கொண்டே புறப்பட்டேன்.

---

## பிரதமரும் வேத மாணவர்களும்

தில்லியில் நடைபெற்ற அகில இந்திய வேத சம்மேளனத்துக்காகக் கும்பகோணம் ராஜா வேத பாடசாலையிலிருந்து ஆறு மாணவர்கள் விசேஷமாக வரவழைக்கப்பட்டிருந்தனர். பாரதப் பிரதமர் மொரார்ஜி தேசாய் இந்த ஆறு வித்யார்த்திகளையும் தம் இல்லத்துக்கு வரவழைத்துக் கௌரவித்தார். படத்தில் பாரதப் பிரதமரையும் வித்யார்த்திகளை அவர்களது ஆசிரியர்களோடும் காணலாம்.



# பிரிங்கால்

# மகாபிரிங்கராஜ்
# ஹேர் ஆயில்

சிரத்திற்கு குளுமையை அளிப்பது டன் உங்கள் கூந்தலுக்கு புத்துணர்ச் சியை அளிக்கிறது.

ஆயுர்வேத முறைப்படி தயாரிக்கப் பட்ட பிரிங்காலில் பிரிங்கராஜ் இலைக ளின் சாறு, நல்லெண்ணை மற்றும் 12 ஆயுர்வேதப் பொருட்கள் அடங்கியுள்ளது.




கல்கத்தா கெமிகல்ஸ்
அளிக்கும் சுகந்த

**மகாபிரிங்கராஜ்**
**ஹேர் ஆயில்**
**பிரிங்கால்**

உண்மையான மூலிகைத் தைலம்

CTC-31 TAM

# பிளவுபட்ட கழகம்!

**க. சந்தானம்**

**கல்கி** மலர் 36 இதழ் 40



தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற — எங்கள்
தாயென்று கும்பிடடி பாப்பா - **பாரதியார்**

தி. மு. க.வின் முன்னணித் தலைவர்கள் பலர் அந்தக் கட்சியிலிருந்து வெளியேறிவிட்டார்கள். தமிழக அரசியலைத் தூய்மைப்படுத்த இது உதவும்.

தி.மு.க.வின் செயற்குழு, கருணாநிதி, நெடுஞ்செழியன் ஆகியோரது ராஜிநாமாவை ஏற்காமல் இருந்ததில் அந்தத் தலைவர்களிடம் தன் விசுவாசத்தைக் காட்டியிருக்கலாம்; ஆனால் அது தார்மீக அடிப்படைகளுக்குத் துரோகம் இழைப்பதாகவும் தி.மு.க.வுக்கு நிரந்தரத் தீமை விளைவிப்பதாகவுமே முடிந்தது. சமீபத்திய மக்கள் சபைத் தேர்தலில் தி.மு.க. படுதோல்வி அடைந்ததற்குக் கருணாநிதி பொறுப்பேற்க வேண்டும் என்பது ஒருபுறமிருக்க, தி.மு.க.வின் புகழுக்கு அவர் பெருந் தீங்கு விளைவித்திருக்கிறார். அவர் முதல்வராக இருந்த காலத்தில் அதிகார துஷ்பிரயோகம் செய்து சர்க்கரை ஆலைகளிலிருந்தும் மற்ற இடங்களிலிருந்தும் சட்டத்துக்குப் புறம்பான முறையில் கட்டாயப்படுத்திப் பணம் பெற்றிருக்கிறார் என்பதற்குச் சர்க்காரியா கமிஷன் முன்பு அபரிமிதமான சாட்சியங்கள் கூறப்பட்டுள்ளன. பணத்தை அவர் தமக்காகப் பெற்றாரா அல்லது கட்சிக்காகப் பெற்றாரா என்பது முக்கியமல்ல. அவை சேகரிப்பட்ட விதம் எந்த நாகரிக அரசுக்கும் பொருந்தாது. இம்மாதிரிப் பணம் சேகரித்ததை அவர் இதுவரை மறுக்கவில்லை என்பது கவனிக்கத் தக்கது. எச். வி. ஆர். ஐயங்கார் போன்றவர்கள் உட்பட மிகப் பெரிய மனிதர்கள் அவர் இப்படிப் பணம் கட்டாயப்படுத்திப் பெற்றார் என்று சாட்சி கூறியுள்ளபோது அவரால் எப்படி மறுக்க முடியும்? வேறு பல முதலமைச்சர்களும் இப்படி நடந்துகொண்டிருக்கலாம் என்று வாதாடுவதில் பயன் இல்லை. ஒவ்வொரு குற்றவாளியும் தனித் தனியேதான் நீதி விசாரணைக்கு உள்ளாக வேண்டும்.

கட்சியின் எதிர் காலம் செயற்குழு உறுப்பினர்களுக்கு முக்கியமானதாக இருந்திருந்தால் அவர்கள் கருணாநிதியின் ராஜிநாமாவை ஒசைப்படாமல் ஏற்றுச் சட்டத்துக்குப் புறம்பான முறையில் கட்டாயமாகப் பெறப்பட்ட பணத்துக்கும் கட்சிக்கும் சம்பந்தமில்லை என்று ஒதுங்கியிருக்க வேண்டும். அத்தகைய முறைகளை இக்கட்சி இனி என்றும் பின்பற்றாது என்று உறுதி கூறியிருக்க வேண்டும். ஆனால் அவ்விதம் நடக்கவில்லை.

தி. மு. க. வின் சாமானிய அங்கத்தினர்கள் ஒன்றுசேர்ந்து செயற்குழுவைப் பதவி நீக்கம் செய்வார்கள், கட்சியைத் தூய்மைப் படுத்துவார்கள், சரியான விதத்தில் புனரமைப்புச் செய்வார்கள் என்று எதிர்பார்ப்பதற்கில்லை. ஆகவே சுயமரியாதை உடைய அங்கத்தினர்களுக்கும் முன்னணித் தலைவர்களுக்கும் தி. மு. க.வை விட்டு வெளியேறுவதைத் தவிர வேறு வழியில்லை.

பொது வாழ்விலிருந்து லஞ்ச ஊழலை ஒழிப்பதைத் தன் முக்கிய கடமையாகக் கொண்டுள்ள ஜனதாக் கட்சி சமீபத்திய மக்கள் சபைத் தேர்தலின்போது தி.மு.க.வுடன் ஏதோ ஒரு விதத்தில் உடன்பாடு கண்டதில் பெரும் தவறு செய்துவிட்டது. அந்தத் தவறு மறுபடியும் நேராது என்று எதிர்பார்ப்போம். அடுத்து வரும் சட்ட சபைத் தேர்தலில் தனித்து நின்று சுதந்திரமாகப் போட்டியிடத் தமிழ்நாடு ஜனதாக் கட்சித் தலைவர்களுக்குத் தன்னம்பிக்கை இருக்க வேண்டும். அவர்கள் கணிசமான ஸ்தானங்களைப் பெறுவது சாத்தியமே. ஒருவேளை விவர்கள் ஒரு ஸ்தானம் கூடப் பெறாமல் போனாலும் பாதகமில்லை, லஞ்ச ஊழலற்ற உண்மை ஜனநாயகம் என்ற லட்சியத்தை மக்கள் முன் சமர்ப்பித்துள்ள ஜனதாக் கட்சியின் நற்பெயருக்குத் தீங்கு நேர்வது போல் ஏதும் மறுபடியும் நடந்துவிடக் கூடாது.

# திண்டாடும் காங்கிரஸ்!

**கா**ங்கிரஸ் காரியக்கமிட்டி புது தில்லியில் நடத்திய சமீபத்திய நீண்ட கூட்டத்தில் உண்மைகளைச் சந்திக்கப் பயந்தது. காங்கிரஸுக்குப் புதுத் தெம்பு அளித்து, அதனைப் பலம் மிக்க, ஒற்றுமை மிக்க கட்சியாக இயங்கச் செய்ய வேண்டும் என்ற அதன் நோக்கத்தை நம்மால் புரிந்து கொள்ள முடிகிறது. அந்த நோக்கம் நிறைவேறுமாயின் காங்கிரஸுக்கும் நல்லது; நாட்டுக்கும் நல்லது. ஆனால் அந்த நோக்கம் நிறைவேற அது சில உண்மைகளை ஒப்புக்கொள்ள வேண்டும். நெருக்கடி நிலைப் பிரகடனம் செய்தது அவசியம்தானா; அல்லவா என்பதைத் தெளிவாகக் கூற வேண்டும். 'நெருக்கடி நிலைப் பிரகடனம் அவசியமாகத்தான் இருந்தது. ஆனால் அது துஷ்பிரயோகமானது வருந்தத் தக்கது' என்று பேசுவது நியாய உணர்வு கொண்ட எந்தக் காங்கிரஸ்காரரையும் திருப்தி செய்யாது. பன்ஸிலாலைப் பலியாடு ஆக்கியது பல காங்கிரஸ்காரர்களின் ஆத்திரத்தைத் தணிக்கும் சாணக்கியமாக இருக்கலாம். ஆனால் பன்ஸிலால் ஸ்ரீமதி இந்திரா காந்தி, அவர் மகன் ஸ்ரீ சஞ்சய் காந்தி ஆகியோரது நேரடி ஆதரவு இன்றி இயங்கினார் என்பதை எந்த நியாய உணர்வுள்ள மனிதனாவது ஒப்புக் கொள்ள முடியுமா? ஸ்ரீமதி இந்திரா காந்தியின் தலைமையைத் தொலைத்துத் தலைமுழுகுவது தவிர காங்கிரஸுக்கு வேறு வழியே யில்லை. இன்றும் என்றும் இனி அவர் தலைமை வேண்டாம் என்று கூறுவிடில் அவரது தனிநபர் பிரபைக்கு மறுபடியும் ஆட்பட்டு அடிமையாக வேண்டியதுதான். பருவா ராஜினாமா செய்ததும் நீங்கு எண்ணுதவரான ஸ்வரண் சிங் தாற்காலிகத் தலைவர் ஆனதும் நல்லதே. ''இந்திரா தான் இந்தியா'' என்ற சதிகாரக் கோஷம் ஒன்றுக்காகவே பருவா காங்கிரஸிலிருந்து வெளியேற்றப்பட வேண்டியவராகிறார். அவர் தாம் தனிநபர் பிரபையை வளர்த்தவர். அதனைப் பிரசாரம் செய்ய நெருக்கடி நிலைப் பிரகடனத்தைத் துஷ்பிரயோகம் செய்தவரும் அவரே. அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி அடுத்த மாதம் கூடும்போது இருட்டில் துழாவுவது போன்ற இந்த நிலை மாறி, காங்கிரஸ் உண்மையான ஜனநாயகப் பற்றுக் கொண்ட கட்சியாக உருவாகத் திடமான நடவடிக்கைகள் எடுக்கப்படும் என்று எதிர்பார்ப்போம். — **க. சந்தானம்**

# தவறான போக்கு

**உ**ள்துறை அமைச்சர் திரு சரண் சிங் ஒன்பது வட இந்திய மாநில காங்கிரஸ் முதல்வர்களை அணுகியுள்ள முறை தவறான போக்காகும். சட்டசபைகளைக் கலைத்துத் தேர்தல்களை அறிவிக்குமாறு ஆளுனரை முதல்வர்கள் தாங்களாகவே கோர வேண்டும் என்று சரண் சிங் அறிவுறுத்தியுள்ளார். சரண் சிங் கூறும் முக்கிய காரணம், சமீபத்திய மக்கள் சபைத் தேர்தலின்போதும் அதன் பின்னரும் காங்கிரஸ் கட்சி இம்மாநிலங்களில் மக்களால் அடியோடு புறக்கணிக்கப்பட்டு விட்டது என்பதே. இந்த வாதத்தில் ஓரளவு அர்த்தம் இருக்கிறது என்ற போதிலும் நமது அரசியல் சாஸனம் விதிக்கும் கூட்டாட்சி முறைக்கு இது முரணானது. அவரது இந்தத் தவறான போக்கு, அரசியல் சாஸனம், கூட்டாட்சி முறை, மாநில சுயாட்சி ஆகியன குறித்து அவருக்குப் பாடம் போதிக்கச் சில காங்கிரஸ் முதலமைச்சர்களுக்கு வாய்ப்பளித்து விட்டது. இதே அமைச்சர்கள் கடந்த பத்து ஆண்டுகளில் இவை பற்றி மூச்சு விட்டார்களில்லை என்றாலும் இப்போது தெம்பு பெற்று விட்டார்கள். கடந்த காலத்தில் அரசியல் சாஸனத்தைச் சிறிதும் மதிக்காமல் இருந்தவர்கள் கூட இப்போது அரசியல் சாஸனத்தின் ஒவ்வொரு அட்சரத்தையும் இன்றைய அரசு மதித்து நடக்க வேண்டும் என்று எதிர்பார்ப்பது விந்தை. அதனை ஜனதா அரசுக்குத் தரப்படும் ஒரு பாராட்டாகவே கருதலாம்.

ஆளுனர் சட்டசபையைக் கலைத்துவிட்டுத் தேர்தலுக்கு உத்தரவிடுவதை விரும்பத் தக்கதாக்கும் சில விசேஷ அம்சங்கள் பீகார் மாநிலத்தில் உள்ளன. அங்கு அறுபது ஸ்தானங்களுக்கு மேல் பூர்த்தி செய்யப்படாமல் இருக்கின்றன. இவ்வளவுக்கும் உப தேர்தல் நடத்துவதை விட மாநிலம் முழுவதற்கும் பொதுத்தேர்தலே நடத்திவிடலாம்—அடுத்த ஆண்டு வரை காத்திராமல். எனினும் பொதுவாக மாநில சட்டசபைகளை அரசியல் சாசனத்தின் 356ம் பிரிவைப் பிரயோகித்துக் கலைத்துவிட முயற்சி நடக்காது என்று எதிர்பார்ப்போம். அப்பிரிவு நெருக்கடி நிலை சம்பந்தப்பட்ட அத்தியாயத்தில் வருவதாகும். இந்த மாநிலங்களில் மேலும் சில மாதங்கள் காங்கிரஸ் ஆட்சி நீடிப்பதால் இம்மாநில மக்களுக்கோ அல்லது மத்தியிலுள்ள ஜனதா அரசுக்கோ பெரிய தீங்கு ஏதும் நேர்ந்து விடாது. இருப்பினும் அந்த மாநில அரசுகள் மக்களின் உண்மையான பிரதிநிதித்துவ சர்க்கார்கள் அல்ல என்ற முறையில் அம்மாநில சட்டசபைகள் நிறைவேற்றும் புதிய சட்டங்களுக்கு ராஷ்டிரபதி அங்கீகாரம் தராமல் இருப்பதும் இந்த அரசுகள் அமல்படுத்த எண்ணும் விசேஷ அபிவிருத்தித் திட்டங்களுக்கு மத்திய அரசு ஒப்புதல் தராமல் இருப்பதும் நியாயமாகும்.

ஜனதா அரசு இம்மியும் பிசகாமல் அரசியல் சாஸனத்தைப் பின்பற்றுவதை மக்கள் எதிர்பார்க்கிறார்கள் என்பது மட்டுமல்ல, இந்திய அரசியல் எதிர் காலத்தில் இலகுவாக இயங்க அது அவசியமுமாகும்.

— **க. சந்தானம்**







## சில அறுவைகள்!

○ ராமசாமி: உங்க தாத்தா எங்கே போயிருக்கார்?

முனுசாமி: பட்டிமன்றத்துக்கு.

ராமசாமி: உங்க பாட்டி?

முனுசாமி: பாட்டி மன்றத்துக்கு!

○ முனுசாமி: 'சின்னம்மா'வை ஆங்கிலத்தில் எப்படி அழைப்பார்கள்?

ராமசாமி: Minimum.

○ ராமசாமி: சைக்கிளில் இரண்டு பேர் போகும்போது போலீஸ்காரர் இதுபோல் இரண்டுபேர் போகக் கூடாது என்றார்.

முனுசாமி: சரி, நீ என்ன செய்தாய்?

ராம: என் நண்பரையும் அழைத்துக்கொண்டு மூன்று பேராகப் போனேம்!

— எஸ். சந்திரசேகர்

○ முனுசாமி: வாழைப் பழத்தில் முள் ஏன் வெளியே இருக்கு தெரியுமா?

ராமசாமி: தெரியாதே!

முனுசாமி: உள்ளே இருந்தால் பழம் தின்னும் பொழுது குத்தும் அதனால்தான்!

○ ராமசாமி: கள் உள்ள மரம் எது?

முனுசாமி: Country.

○ ராமசாமி: ஓட்டை யில்லாத Box எப்படி இருக்கும்?

முனுசாமி: Bx என்று இருக்கும்!

○ முனுசாமி: அண்ணே! அந்த Short handடை எடு.

ராமசாமி: என்னண்ணே அது!

முனுசாமி: கைக்குட்டையை எடுண்ணேன்.



# "ஸ்ரீ யோகாம்பிகை அதிஷ்டானம்"

# ஸ்ரீ யோக கருமாரி அம்மன் அதிஷ்டானம்

திருவேற்காடு P. O. — சென்னை - 600 077







புதுக்கோட்டை, ஸ்ரீ புவனேஸ்வரி பீடம்

**ஸ்ரீமத் சாந்தானந்த சரஸ்வத்யவதூத ஸ்வாமிகள்**

மேற்படி அதிஷ்டானத்திற்கு ஸ்ரீ சக்ர பூர்ண மஹாமேருவை அளித்து
மஹாபிரதிஷ்டை செய்துள்ளார்கள்

## உலக நலனுக்கு 5வது ஆண்டு

# "ஸ்ரீ சதசண்டி மஹா ஹோமம்"

நடைபெறுகின்றது

**29-5-77** ஞாயிறு கணபதி ஹோமம், நவக்ரஹ ஹோமம், ஸ்ரீ புவனேஸ்வரி ஹோமம்
**30-5-77** திங்கள் ஸப்தஸதி பாராயணம், ஸ்ரீ துர்கா ஹோமம், வடுக பூஜை.
**31-5-77** செவ்வாய் ஸப்தஸதி பாராயணம், ஸ்ரீ மஹாலக்ஷ்மி ஹோமம், கன்னிகா பூஜை
**1-6-77** புதன் விசாக பௌர்ணமி, அனுஷ நட்சத்திரம், ஸ்ரீ காமகோடி பெரியவாள் ஜெயந்தி, கோபூஜை, ஸ்ரீ சதசண்டி ஹோமம், சுவாசினி பூஜை, மஹா பூர்ண ஆஹுதி, வசோத்தாரை, ஸ்ரீ யோக கருமாரி அம்மனுக்கு நவகலசம், ஸ்ரீ துர்காலக்ஷ்மி சரஸ்வதி கலஸாபிஷேகம், மஹா தீப ஆராதனை.
மாலை ஸ்ரீ சக்ர பூர்ண மஹாமேருவுக்கு விசேஷ நவாபரண பூஜை நடைபெறும்

புதுக்கோட்டை **Dr. வைத்தீஸ்வர அய்யர்** தலைமையில்
ஸ்ரீ வித்யா உபாஸகர்களால் ஸ்ரீ வித்யா க்ரமப்படி நடைபெறுகின்றது

**திருமதி சௌந்திரா கைலாசம்** வித்வான்களை விமர்சிப்பார்

ஒரு சங்கல்ப ஹோமத்திற்கு ரூ. 150ம், பூஜித்த ஸ்ரீ யோக கருமாரி அம்மன் வெள்ளி டாலர் வேண்டுபவர் ரூ. 15ம் மேற்படி முகவரிக்கு அனுப்பவும்

**தலைவர் :** அருள்மொழி அரசு **திருமுருக கிருபானந்த வாரியார்**
**உப தலைவர் :** அம்பிகை அடிமை **ஸ்ரீ என். சங்கரன்,** திருவேற்காடு
**ஸ்ரீ M.V. சுவாமிநாதன், B. Com., ஸ்ரீமதி K.S. ஜானகி அம்மாள்,** காரியதரிசிகள்

தொலைபேசி : 841785

# "ஆறுகால்" ஸ்தோத்திரம் (17)

**ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சங்கராசாரிய ஸ்வாமிகள்**

பாலைவனங்களில் நிறைய மான் கூட்டங்கள் இருக்கும். அவற்றுக்கு வெயில் காலத்தில் ''ஹா ஹா'' என்று தாகம் எடுக்கும். ஆனால் பாலைவனத்தில் ஜலம் கிடைக்குமா? கிடைக்காவிட்டாலும் போகிறது. அங்கே ஜலமே கிடைக்காது என்பதாவது தெரிந்துவிட்டால் மான் கூட்டம் பாலைவனத்தை விட்டு வெளியிலே உள்ள நீர்வளமுள்ள நாட்டுக்கு ஓடி வந்து உயிரைக் காப்பாற்றிக் கொள்ள முடியும். ஆனால் இதையும் செய்ய முடியாமல் ஜலமே இல்லாத பாலைவனத்தில் ஜலம் இருக்கிறமாதிரி ஒரு ஏமாற்று ஜாலம் நடக்கிறது. அதுதான் கானல் நீர் என்பது. பிரதிபிம்பம் (reflection), ஒளிச் சிதறல் (refraction) 'தியரி'களைக் கொண்டு ஸயன்ஸில் இதை விளக்குகிறார்கள். மொத்தத்தில் இது என்னவென்றால், பாலைவனம் மாதிரியான ஒரு விஸ்தாரமான வெளியில் ரொம்பவும் உஷ்ணம் ஏறிப்போய், காற்றுப் பிரதேசம் லேசாகிவிடுகிறபோது, தூரத்திலிருந்து பார்க்கிறவர்களுக்கு ஜலத்திலே பிரதிபிம்பம் தெரிகிற மாதிரி மண்ணிலேயே தெரிகிறது. தூரத்திலிருந்து பார்க்கிற போது வெறும் மணற்பாங்கான பூமியே ஒரு நதி ஓடுகிற மாதிரித் தெரியும். அதை நோக்கிப் போகப் போக, அதுவும் தள்ளித் தள்ளிப் போகும்.

இப்படிப்பட்ட கானல் நீரைப் பார்த்து மான்கள் வாஸ்தவமான ஜலம் என்று நினைத்து அதைத் தேடித் தேடி ஓடி, கடைசியில் ஓட முடியாமல் களைத்து, வெயிலின் உஷ்ணம் தாங்காமல், ரொம்பவும் பரிதாபமாக ஜீவனை இழக்கும்.

லோகமெல்லாம் மாயை என்று அத்வைத சாஸ்திரத்தில் சொல்லியிருக்கிறது. ''அதெப்படி மாயை? லோகம்தான் கண்ணுக்குத் தெரிகிறதே!'' என்று கேட்டால், ''கானல் நீர்கூடத்தான் கண்ணுக்குத் தெரிகிறது. அதனால் அது நிஜமாகிவிடுமா? அப்படித்தான் இந்த லோகமும் ஒரு கானல் நீர்'' என்று அத்வைத கிரந்தங்களில் சொல்லியிருக்கிறது.

இந்தக் கானல் நீர் — உபமானம், லோகத்தை ஒரு சொப்பனமாக உவமிப்பதை விடப் பொருத்தம் வாய்ந்ததாகும். சொப்பனம் காண்கிற வரையில் அதுவேதான் நிஜம் மாதிரி இருக்கிறது. விழித்துக்கொண்ட பின் அது அடியோடு பொய் என்று தெரிகிறது. அந்த மாதிரிதான் நாம் அஞ்ஞான தசையில் இருக்கிற மட்டும் லோகமே நிஜம் போல இருக்கிறது. ஞானம் வந்துவிட்டால் 'இப்படி ஒன்று இல்லவே இல்லை; ஒரே ஒரு பரமாத்ம ஸத்தியம்தான் இப்படிப் பலவகையான உலகமாகத் தோன்றியிருக்கிறது' என்று தெரியும். இதனால் மாயையை சொப்பனத்துக்கு ஒப்பிடுவதுண்டு. ''சரி, அப்படியானால் விழித்துக்கொண்ட பிற்பாடு ஒருத்தனுக்குச் சொப்பனம் தெரியாத மாதிரி, ஞானிக்கு லோகமே தெரியக் கூடாது. ஆனால் பரம ஞானிகளான ஆசாரியாள், சுகப் பிரம்மம் மாதிரியானவர்களும், லோகம் என்ற ஒன்று இருக்கிற மாதிரியான பாவனை கொஞ்சம் இருந்ததால்தானே, லோக உத்தாரணத்துக்காக உபதேசங்கள் பண்ணினார்கள்? லோகமே தெரியாத நிலையில் யாருக்கு உபதேசம் பண்ணுவது? என்ன உபதேசம் பண்ணுவது? இவர்கள் உபதேசம் பண்ணினதால் லோகம் இவர்களுக்குத் தெரிந்தது என்றுதானே அர்த்தம்? அப்படியானால் இவர்களுக்கு ஞானம் வரவில்லையா?'' என்று கேட்கலாம். இங்கே சொப்பன உபமானத்தை விடக் கானல் நீர் — உபமானம்தான் பொருத்தமாகப் பதில் கொடுக்கிறது. ஒருத்தனுக்குக் கானல் நீர் நிஜமான ஜலம் இல்லை என்று தெரிந்து விடுகிறது. ஆனால் அதற்கப்புறமும் அவன் கண்ணுக்கு ஜலம் ஓடுகிறது மாதிரியான அந்தப் பொய்த் தோற்றம் நன்றாகத் தெரிந்து கொண்டுதானே இருக்கிறது? இதனால் அவன் அதை நிஜ ஜலம் என்று நினைத்து ஓடுகிறவர்களிடம், ''ஓடாதீர்கள். ஜலம் மாதிரி கண்ணுக்குத் தெரிந்தாலும் அதில் ஜலம் இல்லை'' என்று எடுத்துச் சொல்லித் தடுக்க முடிகிறது.

''ம்ருக த்ருஷ்ணா'' — ''மானின் தாகம்'' — அந்தத் தாகத்தினால் தேடப்படும் கானல் நீருக்கே பெயராகி விட்டது. இது இலக்கியத்தில் அலங்கார சாஸ்திரத்தில் சொல்லியிருக்கிற ஓர் அணி (figure of speech) யின்படி உண்டான பெயர்.

திருமூலர் பஞ்ச இந்திரியங்களை ''பால் பசு ஐந்து'' என்று சொன்னார். இங்கே பகவத்பாதாள் இந்திரியங்களை மான்களாகச் சொல்கிறார். ''கானல் நீரைத் தேடி ஓடி ஓடிப் போய், பாவம், கடைசியில் வெயில் தாளாமல் பிராணனை விடுகிற மான்கள் மாதிரி, இந்திரியங்கள் ஒவ்வொன்றும் ஒவ்வொருவிதமான அல்ப சுகத்தைத் தேடித் தேடி ஓடி வீணாகப் போகிறதே! இந்தக் கஷ்டம் வேண்டாமப்பா! புலன்களின் இந்த வேட்கையை அடக்குவாய் — சமய விஷய ம்ருக த்ருஷ்ணாம்'' என்று மகா விஷ்ணுவிடம் பிரார்த்திக்கிறார்.

(தொடரும்)

---

**[1932ம் வருஷத்திலிருந்து பெரியவர்கள் வழங்கிய உரைகள், ஸ்ரீமுகங்கள், கட்டுரைகளிலிருந்து தொகுத்தது]**

# களைப்பு மிக்க வாழ்க்கை

காலை மணி 8.00




மணி 10.15




மணி 11.00




பிற்பகல் மணி 12.00




சிறிது நேரத்திற்குப் பிறகு




அன்று மாலை




நீங்கள் களைப்புறுவதற்குக் காரணம்—உங்கள் உடலுக்கு க்ளுகோஸ் தேவைப்படுவது தான். க்ளாக்ஸோஸ்-D உங்களுக்கு உடனடியாகச் சக்தியளிக்கிறது. அது வைட்டமின்-D மற்றும் கால்ஷியம் பாஸ்பேட்டுகள் செறிந்த தூய க்ளுகோஸ் பவுடர்

100 கிராம் பேக்கின் விலை ரூ 2.09 மட்டுமே.
(உள்ளூர் வரிகள் தனி)



## க்ளாக்ஸோஸ்-D®
## உடனடி சக்திக்கு

dCA/GL/40 M TAM.

# பார்த்திபன் கனவு



## அத்தியாயம் 17

## தீனக் குரல்

ராஜ பிரயாணிகளும் பரிவாரங்களும் அந்தக் காட்டாற்றங் கரையில் உணவு அருந்தினார்கள். விதம் விதமான பட்சணங்களும், பான வகைகளும் குந்தவி, மகேந்திரன் இவர்கள் முன் வைக்கப் பட்டன. மகேந்திரன் உற்சாகமாகச் சாப்பிட்டான். குந்தவிக்கு ஒன்றும் வேண்டியிருக்கவில்லை. உணவுப் பொருள்களை ஆற்றங்கரைக் காக்கைகளுக்கு வீசி எறிந்து, அவை பறந்து வந்து கௌவிக் கொள்வதைப் பார்த்து மகிழ்ந்தாள். இந்த மகிழ்ச்சியும் வெளிப்படையானதுதான். மனத்திலே அந்தக் காட்டாற்று வெள்ளத்தில் மூழ்கி மாண்டுபோன இரத்தின வியாபாரியின் நினைவு பெரும் பாரமாக இருந்தது. ஆம்; இறந்து போனவன் இரத்தின வியாபாரிதான், — சோழ நாட்டு இராஜகுமாரன் அல்ல என்று குந்தவி ஒருவாறு முடிவு செய்து கொண்டிருந்தாள். தன் உள்ளத்தைக் கவர்ந்த சுகுமாரனுக்கு அத்தகைய கதி நேர்ந்தது என்ற எண்ணத்தை அவளால் சகிக்க முடியவில்லை; ஆகையால் அதில் நம்பிக்கையும் பிறக்கவில்லை.

உணவருந்திச் சற்று இளைப்பாறிவிட்டு எல்லோரும் கிளம்பிப் பயணத்தைத் தொடர்ந்த போது, குந்தவிக்கு ஒரு நினைவு தோன்றியது. அகால மரணமடைந்தவர்களின் ஆவி அவர்கள் இறந்த இடத்திலேயே சுற்றிக் கொண்டிருக்கும் என்று சொல்வார்களே, அது உண்மையா? ஒருவேளை அந்த இரத்தின வியாபாரியின் ஆவியும் இந்த ஆற்றங்கரையிலேயே வட்டமிட்டுக் கொண்டிருக்குமா? நள்ளிரவில் இங்கே பயங்கரமாக அலறுமோ? — இப்படி அவள் எண்ணியபோது, எங்கேயோ வெகு தொலை தூரத்திலிருந்து மிகவும் தீனமான ஒரு குரல் கேட்பது போலிருந்தது. அந்த மெல்லிய குரல், 'அம்மா! அம்மா!' என்பது போல் அவளுக்குத் தோன்றியது. குந்தவியின் தேகம் சிலிர்த்தது. அது தன்னுடைய சித்தப் பிரமையா? அல்லது உண்மையில் இரத்தின வியாபாரியின் ஆவி அலறும் குரல்தானா? அண்ணாவிடம் கேட்கலாமென்று வாயெடுத்தாள். ஆனால் பேசுவதற்கு நா எழவில்லை.

இது என்ன அதிசயம்! பல்லக்கு மேலே போகப் போக, அந்தக் குரல் கெட்டியாகி வருகிறதே? இரத்தின வியாபாரியின் ஆவி தங்களைத் தொடர்ந்து வருகிறதா, என்ன?

இன்னும் சற்றுத் தூரம் போனதும், ''அம்மா! அம்மா!'' என்னும் அந்த அபயக் குரல் தெளிவாகக் கேட்கத் தொடங்கியது. அது நிஜமான மனிதக் குரலாகவே தொனித்தது.

ஒருவாறு குந்தவி சமாளித்துக் கொண்டு, ''அண்ணா! ஏதோ தீனக் குரல் கேட்பது போலிருக்கிறதே? உனக்குத் தெரிகிறதா?'' என்று கேட்டாள்.

''ஆமாம், தங்காய்! யாரோ 'அம்மா! அம்மா!' என்று அலறும் குரல் கேட்கிறது'' என்று மகேந்திரன் சொல்லிக் குதிரை மேலிருந்தபடியே சுற்று முற்றும் பார்த்தான்.

அமரர் கல்கி

''அதோ அந்த மண்டபத்திலிருந்து குரல் வருவது போலிருக்கிறது!''

ஆற்றங்கரையிலிருந்து கூப்பிடு தூரத்திலேதான் விக்கிரமன் தங்கிய மகேந்திர மண்டபம் இருந்தது. சாலையில் அந்த மண்டபம் இருக்கும் இடம் நெருங்கியதும், குரல் அங்கிருந்துதான் வருகிறது என்று ஐயமறத் தெரிந்தது. குந்தவி பல்லக்கை அந்த மண்டபத்தருகே கொண்டு போகச் சொன்னாள். ஏதோ ஓர் அதிசயத்தைக் காணப் போகிறோம் — பெரியதோர் இரகசியத்தைக் கண்டுபிடிக்கப் போகிறோம் — என்ற எண்ணத்தினால் அவளுடைய நெஞ்சம் 'திக்திக்' என்று அடித்துக் கொண்டது.

■ ■ ■

மண்டபத்திலிருந்து வந்த குரல் விக்கிரமனுடைய குரல்தான் என்று வாசகர்கள் ஊகித்திருப்பார்கள். அன்று

காலையில் பொன்னன் ஆழ்ந்த தூக்கத்திலிருந்து கண் விழித்து எழுந்தபோது, தனக்கு முன்னமே விக்கிரமன் எழுந்து உட்கார்ந்திருப்பதைக் கண்டான்.

''பொன்னா! கிளம்பலாமா?'' என்று கேட்டான் விக்கிரமன்.

இருவரும் கலந்து யோசித்து, வெய்யிலுக்கு முன்னால் புறப்பட்டுச் சாலையோடு நடந்து போவது என்றும், வழியில் வண்டி கிடைத்தால் வைத்துக் கொள்வது என்றும் தீர்மானித்துக் கொண்டு கிளம்பினார்கள். ஆனால், கிளம்பி விக்கிரமன் சில அடி தூரம் நடப்பதற்கு முன்னமே அவன் தள்ளாடுவதைப் பொன்னன் கவனித்தான். ''மகாராஜா...'' என்று அவன் ஏதோ கேட்க ஆரம்பிப்பதற்குள்ளே விக்கிரமன் தரையில் அப்படியே உட்கார்ந்து விட்டான். பொன்னன் பரபரப்புடன் விரைந்து, விக்கிரமனை அணுகி, ''ஐயோ! என்ன மகாராஜா? உடம்புக்கு என்ன?'' என்று கேட்டான்.

''தலையை அசாத்தியமாய் வலிக்கிறது பொன்னா! ஒவ்வோர் அடி எடுத்து வைக்கும்போதும் பட் பட் என்று போடுகிறது. காலும் தடுமாறுகிறது. எனக்கு என்னவோ தெரியவில்லை'' என்றான் விக்கிரமன்.

பொன்னன் அவனுடைய உடம்பைத் தொட்டுப் பார்த்துவிட்டு, ''ஐயோ! மகாராஜா! உடம்பு கொதிக்கிறதே? இராத்திரி நன்றாய்த் தூங்கினீர்களா?'' என்று கேட்டான்.

''இல்லை; என்னவெல்லாமோ ஞாபகங்கள். சரியாகத் தூக்கம் வரவில்லை.''

''ஜுரந்தான் காரணம், மகாராஜா! பாவி நான் கும்பகர்ணனைப் போல் தூங்கினேன். என்னை எழுப்பியிருக்கக் கூடாதா? — இந்த உடம்போடு உங்களால் ஓர் அடி கூட நடக்க முடியாது, வாருங்கள்!'' என்று சொல்லி விக்கிரமன் கையைப் பிடித்துத் தூக்கி விட்டு அணைத்துக் கொண்டபடியே மீண்டும் மண்டபத்துக்குள் கொண்டுசேர்த்தான்.

பிறகு, பொன்னன் நதிக் கரைப் பக்கம் ஓடிச் சென்று அங்கே சிந்திக் கிடந்த





வைக்கோலை யெல்லாம் திரட்டிக் கொண்டு வந்தான். வைக்கோலைப் பரப்பி அதன் மேல் விக்கிரமனைப் படுத்துக் கொள்ளச் செய்தான்.

மேலே என்ன செய்வது என்று இருவரும் யோசனை செய்தார்கள். சாலையோடு போகும் மாட்டு வண்டிக்காகக் காத்திருந்து ஏதாவது ஒரு வண்டியை அமர்த்திக் கொண்டு அடுத்த ஊருக்குப் போவதென்றும், அங்கே வைத்தியம் பார்த்துக் கொண்டு கொஞ்சம் உடம்பு தேறியதும் கிளம்புவதென்றும் தீர்மானித்தார்கள். வேறு வழி எதுவும் இருப்பதாகத் தெரியவில்லை.

''ஐயோ! இச்சமயம் வள்ளி இங்கே இல்லாமல் போனாளே? ஏதாவது மந்திர சக்தியினால் அவள் திடீரென்று இங்கே வந்து விடக் கூடாதா?'' என்று பொன்னன் அடிக்கடி எண்ணமிட்டான். ஜுரமாகக் கிடக்கும் விக்கிரமனுக்கு வேண்டிய சிசுருஷை செய்ய அவனுக்கு ஒன்றும் தெரியவில்லை.

கொஞ்ச நேரத்துக்கெல்லாம் விக்கிரமன் 'தாகம்' 'தாகம்' என்று பறந்தான். அந்த மண்டபத்தின் பின்புறத்தில் பிரயாணிகள் சமையல் செய்துவிட்டு எறிந்திருந்த மண் சட்டிகள் சில கிடந்தன. அவற்றில் ஒரு சட்டியைப் பொன்னன்



''ஜே ஃபார் ஜேப்படி'ன்னு படிக்கிறான் உன் மகன்!''

எடுத்துக் கொண்டு போய் நதியிலிருந்து தண்ணீர் கொண்டு வந்தான். ''பொற் கிண்ணத்தில் தண்ணீர் அருந்த வேண்டிய மகாராஜா இந்தப் பழைய மண் சட்டியில் குடிக்க வேண்டியதாயிற்றே!'' என்று பொருமினான்.

நேரமாகிக் கொண்டேயிருந்தது. ஜுரமும் அதிகமாகிக் கொண்டிருந்தது. பொன்னனுக்கு ஒரு பக்கம் பசி எடுத்தது. இன்னது செய்வது என்று தெரியாமல் மனம் குழம்பிற்று. மகாராஜாவுக்கு வைத்தியம் செய்யாமல், தானும் சாப்பிடாமல் இருந்தால் இருவரும் அங்கேயே மடியவேண்டியதுதான். கடைசியாக ஒரு முடிவுக்கு வந்தான். பக்கத்தில் உள்ள ஏதாவது ஓர் ஊருக்குப் போய் வைத்தியனையும் அழைத்துக் கொண்டு ஒரு வண்டியையும் அமர்த்திக் கொண்டு வரவேண்டியது. அதுவரையில் விக்கிரமனைச் சோழரின் குல தெய்வமான முருகக் கடவுள்தான் காப்பாற்ற வேண்டும்.

விக்கிரமனும் வேறு வழியில்லையென்று இதற்குச் சம்மதிக்கவே, பொன்னன் மீண்டும் மீண்டும் மண்டபத்தைத் திரும்பிப் பார்த்துக் கொண்டு விரைவாக நடந்தான்.

பொன்னன் போன பிறகு விக்கிரமனுக்கு இன்னும் ஜுரம் அதிகமாயிற்று. கொஞ்ச நேரத்துக்கெல்லாம் நல்ல நினைவு தப்பி விட்டது. மனத்தில் என்னவெல்லாமோ குழப்பமான எண்ணங்கள் குமுறின. வாய் என்னவெல்லாமோ சம்பந்தமில்லாத சொற்களைப் பிதற்றியது. அளவில்லாத வலியினால் உடம்பை முறித்துப் போட்டது. வர வரப் பலவீனம் அதிகமாயிற்று. கடைசியில் வாயிலிருந்து குமுறிய சொற்கள் வருவது நின்று, ''அம்மா! அம்மா!'' என்ற கதறல் மட்டும் தீனமான குரலில் வரத் தொடங்கியது.

இப்படிப்பட்ட நிலைமையில்தான் குந்தவியின் பல்லக்கு அந்த மண்டபத்தின் வாசலில் நின்றது. குந்தவி அவசரமாகப் பல்லக்கிலிருந்து இறங்கி மண்டபத்தின் வாசற்படியில் வந்து நின்று உள்ளே பார்த்தாள். ஆமாம்; இரத்தின வியாபாரிதான். அவனுடைய பால் வடியும் முகம் தாப ஜுரத்தினால் கோவைப் பழம் போலச் சிவந்திருந்தது. விசாலமான கண்கள் ஒரு கணம் மேல் நோக்கித் திறுதிறு வென்று விழிப்பதும் மறுபடியும் மூடுவதுமாக இருந்தன. ''அம்மா! அம்மா!'' என்று அடிக்கடி வாய் அரற்றிற்று.

இந்தக் காட்சியைக் கண்டதும் குந்தவியின் உள்ளத்தில் உண்டான உணர்ச்சிப் புரட்சியை உள்ளபடி விவரிப்பது இயலாத காரியம். வியப்பு, மகிழ்ச்சி, துக்கம், இரக்கம் ஆகிய பல்வேறு மாறுபட்ட உணர்ச்சிகள் ஒன்றோடொன்று கலந்து போராடின. எல்லாவற்றிற்கும் மேலாகப் பரபரப்பு மிஞ்சி நின்றது.

''அண்ணா! அண்ணா! இவன் இரத்தின வியாபாரிதான் அண்ணா! இவனுக்கு உடம்பு சரியில்லை போலிருக்கிறது, வைத்தியரைக் கூப்பிடு'' என்று கூச்சலிட்டாள்.

ராஜ பிரயாணிகளுடன் கூடப் பிரயாணம் செய்த ராஜவைத்தியர் வந்து பார்த்தார். ''கடுமையான விஷ ஜுரம்; உடனே சிகிச்சை செய்ய வேணும். குணமாவதற்குப் பத்து நாட்கள் பிடிக்கும்'' என்றார்.

''பாவம்! இவனை நம்முடன் அழைத்துப் போகலாம், அண்ணா! செண்பகத்தீவைப் பற்றி இவனிடம் கேட்க வேண்டிய காரியமும் இருக்கிறதல்லவா?'' என்றாள் குந்தவி.

பிறகு காரியங்கள் வெகு துரிதமாக நடந்தன. இராஜவைத்தியர் ஏதோ மருந்து எடுத்துக் கொண்டுவந்து விக்கிரமனுடைய நாவில் தடவினார். பின்னர் அவனைத் தூக்கிக்கொண்டு வந்து குந்தவியின் பல்லக்கில் போட்டார்கள். குந்தவி ஒரு குதிரையின் மீது ஏறிக்கொண்டாள். மறுபடியும் பிரயாணம் ஆரம்பமாயிற்று.

■ ■ ■

பொன்னன் போன இடத்தில் வெகு கஷ்டப்பட்டு ஒரு வைத்தியனைத் தேடிப் பிடித்தான். வண்டியும் அமர்த்திக் கொண்டு மகேந்திர மண்டபத்துக்கு வந்து, ''மகாராஜாவுக்கு எப்படி இருக்கிறதோ?'' என்று திக் திக்கென்று நெஞ்சு அடித்துக் கொள்ள உள்ளே வந்து பார்த்தபோது மண்டபம் சூனியமாயிருக்கக் கண்டான். அவன் தலையில் திடீரென்று இடி விழுந்தது போல் இருந்தது. (தொடரும்)

# புதிய அமைச்சர்கள்; புதிய அறிமுகங்கள்!

## திரு பி. ராமச்சந்திரன்

'கடவுளை நம்பினோர் கைவிடப்படார்' என்பது போல் 'காமராஜரை நம்பியவர் கை விடப்படார்' என்று திரு பி. ராமச்சந்திரன் நிரூபித்திருக்கிறார்.

'இணைப்பு' நாடகத்தில் நடிக்க மறுத்த வீரர். முற்போக்குக் கூட்டணி என்ற தமிழகக் காட்டாற்று வெள்ளத்தில் அடித்துக்கொண்டு போகாமல் அவரைக் கரை ஏற்றிய 'சக்தி' அவரை மத்திய அமைச்சரவையில் 'சக்தி' அமைச்சராகவே ஆக்கி விட்டிருக்கிறது.

இப்போது நடந்து முடிந்தது ஆறுவது பொதுத்தேர்தல். இந்த ஆறு பொதுத் தேர்தல்களிலும் குதித்து வெற்றி தோல்விகளை மாறி மாறிச் சந்தித்து மனப் பக்குவத்தை வளர்த்துக் கொண்டவர் திரு ராமச்சந்திரன்.

சென்னை பச்சையப்பன் கல்லூரியின் பழைய மாணவர். கோவைக் கல்லூரி ஒன்றின் முன்னாள் 'லெக்சரர்'. சென்னை செக்ரடேரியட்டின் அக்கால ஊழியர்.

## சாந்தி பூஷண்

நாற்பத்தி நான்காவது வயதிலேயே உத்தரப் பிரதேச மாநில அட்வகேட் ஜெனரலாகப் பதவி வகிக்கும் வாய்ப்பையும் அதிருஷ்டத்தையும் பெற்றவர் திரு சாந்தி பூஷண். அதே போல் தேர்தலில் நிற்காமலேயே, மத்திய அமைச்சரவையில் சட்ட மந்திரியாகப் பொறுப்பேற்கவும், இவரது திறமையும் அதிருஷ்டமும் துணைசெய்தன. இனிமேல்தான் இவர் ஏதாவது இடைத் தேர்தலிலோ, ராஜ்ய சபாவுக்கான தேர்தலிலோ நின்று தேர்ந்தெடுக்கப்பட வேண்டும்.

அலகாபாத் உயர் நீதிமன்றத்தில் ஸ்ரீமதி இந்திரா காந்திக்கு எதிராக 1971ம் ஆண்டில் ராஜ்நாராயணன் அவர்கள் தொடுத்த வழக்கில், ராஜ்நாராயணனை வெற்றி பெறச் செய்த வழக்கறிஞர் என்பதால் இவர் புகழ் ஒரே நாளில் வானத்தைத் தொட்டது.

இதன் விளைவாகத் தமிழ் நாட்டு முன்னாள் முதல்வர் திரு கருணாநிதி கூட சர்க்காரியா கமிஷன் விசாரணையில் தம் பக்கம் வாதாட சாந்தி பூஷணை அழைத்து வந்தார்.

மாநிலத்திலோ, மத்தியிலோ, மந்திரி பதவி அனுபவம் இதுதான் முதல் தடவை.

## பிஜு பட்நாயக்

சுதந்திரப் போராட்ட வீரர். ஒரிஸ்ஸா மாநில முதல்வர் பதவி வகித்த அனுபவம் உண்டு. ஆகாய விமானம் ஓட்டுவதிலும் அதிசமர்த்தர். பாராளு மன்றம் புதிது. இவரிடம் எஃகு, சுரங்க இலாகா ஒப்படைக்கப்பட்டிருக்கிறது. தொழிலதிபர் என்ற முறையில், இந்தத் துறைகளைப் பற்றி இவர் ஏற்கனவே நன்கு அறிந்தவர்.

## மோஹன் தாரியா

1975ம் ஆண்டு மத்தி வரை இந்திரா காந்தி அரசில் மந்திரியாக இருந்தவர்தாம்.



இடம் - வலமாக:
பி. ராமச்சந்திரன்
சாந்திபூஷண்
பிஜு பட்நாயக்
மோஹன்தாரியா

இவர் ஒரு ஜே. பி. அனுதாபி. அதைக் கொஞ்சம் வெளிப்படையாகக் காண்பித்துக் கொள்ளவே ஆபத்து வந்தது மந்திரி பதவிக்கு! ஸ்ரீமதி இந்திரா, தாரியாவுக்கு 'டாட்டா' காண்பித்து விட்டார்.

பிரஜா சோஷலிஸ்ட் கட்சியிலிருந்து காங்கிரசுக்கு வந்தவர். ராஜ்ய சபா உறுப்பினரானபோது இளம் துருக்கர் பட்டத்தையும் பெற்றார்.

சட்டம் படித்தவர். இப்போது, வணிகம், கூட்டுறவு துறைகளுக்கான அமைச்சர்.

## பிரிஜ்லால் வர்மா

சட்டம் படித்தவர். இடையே 'வெள்ளையனே வெளியேறு' இயக்கத்தில் கலந்து கொண்டு பட்டப் பரீட்சை எழுத முடியாமல் தடை செய்யப்பட்டவர். ஆனாலும் முயற்சி செய்து பட்டம் பெற்று வழக்கறிஞரானார்.

ஏழை மக்களுக்கு இலவசச் சட்ட ஆலோசனை கொடுத்து உதவுவதை வாழ்க்கை இலட்சியமாகக் கொண்டார்.

மத்தியப் பிரதேசத்தில் சம்யுக்த விதாயக் தல் அமைத்த மந்திரி சபையில் அமைச்சராக இருந்த அனுபவமும் உண்டு. அதே போல் பல கட்சிகளில் மாறி மாறி இருந்த காலமும் உண்டு.

காங்கிரஸ், கிஸான் மஸ்தூர், பிரஜா கட்சி, பிரஜா சோஷலிஸ்ட், மீண்டும் காங்கிரஸ் ஜனசங்கம். இப்போது ஜனதா! புதிய அமைச்சரவையில் தொழில் இலாக்கா இவருக்குக் கிடைத்திருக்கிறது.

## எச். எம். படேல்

முன்னாளைய ஐ. ஸி. எஸ். காரர். அரசு அதிகாரியாக இருந்து ஓய்வு பெற்றவர். அதிலும் நிதி இலாகாவிலேயே பிரதான காரியதரிசியாக இருந்து அனுபவம் பெற்றவர். இதன் காரணமாகவே நிதி இலாக்கா அமைச்சர் பொறுப்பை இவரிடம் விட்டு விட்டார் பிரதமர்!

படேல் ஓய்வு பெற்ற பிறகு 'சுதந்திரா' கட்சியில் சிலகாலம் இருந்தார். புள்ளி விவரங்களிலும் நிர்வாகத் திறமையிலும் கெட்டிக்காரர்.

## பிரதாப்சந்திர சுந்தர்

வங்காளத்தைச் சேர்ந்த இவர் ஒரு கல்வித் துறை நிபுணர். நாவலாசிரியர். நாடக ஆசிரியர். கௌடில்யரின் அர்த்த சாஸ்திரத்தைக் கரைத்துக் குடித்து அதற்கு வியாக்கியானம் எழுதி டாக்டர் பட்டம் பெற்றவர்.

மாணவப் பருவத்திலிருந்தே காங்கிரஸ் காரர். இரண்டு தடவை மாநில சட்ட சபைக்குத் தேர்ந்தெடுக்கப் பட்டிருக்கிறார். குறுகிய காலத்துக்கு மாநில மந்திரியாக இருந்த அனுபவமும் உண்டு. ஸ்தாபன காங்கிரஸில் தங்கியதற்கு இப்போது பலன் கிடைத்திருக்கிறது.

ஐம்பத்தெட்டு வயதை எட்டிய பிரதாப் சந்திர சுந்தர் உலகத்தின் பல நாடுகளுக்கும் போய் வந்திருக்கிறார். சீனாவையும் விட்டு வைக்கவில்லை.

இந்த உலகம் சுற்றிய (உள்ளத்தால்) வாலிபர், இப்போது மத்திய அரசில் கல்வித் துறைப் பொறுப்பை ஏற்றுக் கொண்டிருக்கிறார்.

## சிக்கந்தர் பக்த்

முதல் தடவையாகப் பாராளுமன்றத் தேர்தலில் போட்டியிட்டு வெற்றி பெற்று அமைச்சராகவும் ஆகும் அரிய வாய்ப்பு இவருக்குக் கிடைத்தது. இது வெகு சிலரையே தேடி வரும் அதிருஷ்டம். வேறுவகையான அதிருஷ்டமும் இவரை இருபது மாதங்களுக்கு முன் தேடி வந்தது.

ஆம்! நெருக்கடி நிலை பிரகடனமானவுடன் சிக்கந்தர் பக்த் சிறைக்குள் தள்ளப்பட்டார். பதினெட்டு மாதங்கள் கழித்து வெளியே வந்தார். வெற்றி வாகை சூடினார்!

தில்லி மெட்ரோபாலிடன் கவுன்சிலில் உறுப்பினராகப் பத்து வருட காலமாக இருந்து வருகிறார். ஸ்தாபனக் காங்கிரசுடன் தம்மைப் பிணைத்துக் கொண்டவர்.

இடம் - வலமாக:

பிரிஜ்லால் வர்மா
எச். எம். படேல்
பிரதாப் சந்திர சுந்தர்
சிக்கந்தர் பக்த்
பிரகாஷ் சிங் பாதல்

## பிரகாஷ் சிங் பாதல்

பஞ்சாப் மாநிலத்தின் மிகப் பணக்கார விவசாயி திரு பாதல். விவசாய இலாகா இவருக்குக் கிடைத்திருப்பது பொருத்தம் தான். நிர்வாகத் துறையிலும் நிறைய அனுபவம் உண்டு.

லாகூர் கல்லூரியில் படித்துப் பட்டம் பெற்ற இந்த நிலக்கிழார், 1957ல் காங்கிரஸ் காரராகத்தான் தேர்தல் களத்தில் மாநில சட்டசபைக்காகக் குதித்தார். பிறகு அகாலி தளத்தோடு ஐக்கியமானார். 1971ம் ஆண்டில் இவர் பஞ்சாப் முதல் மந்திரியாகவும் இருந்தார்.

## ரவீந்திர வர்மா

கேரளத்தைச் சேர்ந்த மாவேலிக்கரையில் பிறந்த ரவீந்திர வர்மா, சென்னை கிறிஸ்

இவக் கல்லூரியின் பழைய மாணவர். மாண வப் பருவத்திலேயே அரசியலில் நாட்டம் கொண்டவர். இளைஞர் காங்கிரஸ் தலைவரானார். இரண்டு தடவைகள் உலக இளைஞர் பேரணிக்குச் சர்வதேசத் தலைவராகப் பணியாற்றிய பெருமை இவருக்கு உண்டு.

இவர் ஸ்தாபனக் காங்கிரஸிலேயே தங்கி விட்டவர். 1972ல் அதன் காரியதரிசிப் பொறுப்பையும் ஏற்றுக் கொண்டார். ஏற்கனவே பாராளுமன்ற உறுப்பினராக இருந்த அனுபவமும் உண்டு.

இப்போது, இவர் தொழிலாளர் நலன், மற்றும் பாராளுமன்ற நடவடிக்கைகளுக்கான அமைச்சர்.

## புருஷோத்தம் லால் கௌசிக்

சமீப காலம் வரை ஸ்ரீமதி இந்திராவின் கொபெல்ஸ் என்று ஒலிபரப்பு இலாக்காவில் பெயர் பெற்றிருந்த வித்யா சரண் சுக்லாவுக்கு எதிராகப் போட்டியிட்டு, வெற்றி பெற்றவர் புருஷோத்தம் லால் கௌசிக். சட்டம் படித்தவர். காலம் சென்ற ராம் மனோகர் லோகியாவின் அத்யந்த சீடர். இவர் ஒரு சோஷலிஸ்ட்.

தேர்தலுக்காக வேட்பு மனு தாக்கல் செய்தபோது, 1947ம் ஆண்டு ஆகஸ்ட் 15ம் தேதியில் தமக்கு இருந்த சொத்து விவரங்களையும் 1977 ம் ஆண்டு பிப்ருவரி முதல் தேதியில் தமக்கிருக்கும் சொத்து விவரங்களையும் வெளிப்படையாகப் பொதுமக்களுக்கு அறிவித்துவிட்டார். இதுவே அவர் வெற்றிக்கு முதல் படியாக அமைந்தது.

பாராளுமன்றமும் அமைச்சர் பதவியும் இவருக்குப் புது அனுபவங்கள்.

சுற்றுலா, விமானப் போக்குவரத்து இலாகாக்கள் இவரிடம் ஒப்படைக்கப்பட்டிருக்கின்றன. தொகுப்பு: **கோமதி சுவாமிநாதன்**



# அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி.

பொன்னியின் புதல்வர் பெயரால் ஆண்டு தோறும் நடைபெறும் இச் சிறுகதைப் போட்டிக்குப் பொன்னான சிறுகதைகளை வரவேற்கிறோம். இளம் எழுத்தாளர்களின் புதுமைப் படைப்புக்களுடன் பிரபல எழுத்தாளர்களின் சீரிய படைப்புக்களையும் எதிர்பார்க்கிறோம். மர்மக் கதை, சமூகக் கதை, புராணக் கதை, சரித்திரக் கதை, நகைச்சுவைக் கதை, கிராமச் சூழல் கதை, பிரச்னைக் கதை போன்ற எதுவாக வேணுமானாலும் இருக்கலாம். கதைக்காகவே எழுதப்பட்ட கதையாகவும் இருக்கலாம்.

இலக்கிய நயத்துடன் அமையும் சிறந்த கதைகளுக்குப் பின்வருமாறு பரிசுகள் வழங்க உத்தேசித்திருக்கிறோம்.

| | |
|---|---|
| **முதல் பரிசு** | **ரூ. 1000/-** |
| **இரண்டாம் பரிசு** | **ரூ. 500/-** |
| **மூன்றும் பரிசு** | **ரூ. 500/-** |

**(தலா ரூ. 250 வீதம் இரு கதைகளுக்கு)**

தவிர, பிரசுரத்துக்கு ஏற்கப்படும் ஒவ்வொரு கதையும் ரூ. 100 பரிசு பெறும்.

**முடிவு தேதி: ஜூன் 15உ**

நிபந்தனைகள்: சிறுகதைகளைத் திரும்பப் பெறப் போதிய அளவு தபால் தலை ஒட்டிய சுய விலாசமிட்ட உறைகளை அனுப்புதல் வேண்டும். ○ சிறுகதைகள் கல்கியில் நாலு பக்கங்களுக்கு மேல் போகாமல் அமைவது நலம். ○ கடிதப் போக்குவரத்து கிடையாது. ○ கல்கி ஆசிரியர் தீர்ப்பே முடிவானது. ○ உறையின் மேல் அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி என்று குறிப்பிடுதல் அவசியம்.

**ஆசிரியர், கல்கி, சென்னை - 600031**



# 5. மங்காவின் மறைவு

சேலம், கோயமுத்தூர், திருச்சிராப்பள்ளி மாவட்டங்களில், 1900க்கும் 1919க்கும் இடைப்பட்ட காலத்தில் மிகப் பிரபலமாக விளங்கிய வழக்கறிஞர்கள் அநேகமாக ஸி. ஆரும் அவரது மூத்த நண்பர் ஸி. விஜயராகவாச்சாரியாரும்தான்.

1906லேயே ஸி. ஆர். சென்னை உயர் நீதிமன்ற வழக்கறிஞராகத் தம்மைப் பதிவு செய்து கொண்டு விட்டார். (அவர் பெயரைப் பிரேரேபித்தவர் சட்டக் கல்லூரி முதல்வர் டாக்டர் எஸ். சுவாமிநாதன்.) ஆனபோதிலும் அபூர்வமாகவே அவர் அங்கு சென்று வழக்காடினார் என்பதாகத் தெரிய வருகிறது. கோவைக்கும் திருச்சிக்கும் அவர் வழக்குகள் நிமித்தம் செல்வதும் அபூர்வமாகவே இருந்தன.

சேலம் நகர நீதிமன்றத்தில் கோடைக் காலத்தில் ஒரு பணியாள் பங்காக் கயிற்றை இழுத்துக் காற்று வீசச் செய்வான். ஸி. ஆருக்குப் பிரதான அரங்கமாகத் திகழ்ந்தது இந்த




நீதிமன்றமே. எனினும் தெற்கே நாமக்கல்லூருக்கு இரவோடு இரவாக அவர் மாட்டு வண்டியில் அடிக்கடி பயணப்படுவார். சேலம் மாவட்டத்தின் வடக்குப் பகுதியில் இருந்த தர்மபுரி, கிருஷ்ணகிரி, ஒசூர் ஆகிய ஊர்களின் நீதிமன்றங்களுக்கும் போவார்; ஆனால் அடிக்கடி அல்ல.

கொலை, கொள்ளை, பொய்க் கையெழுத்திடுதல் போன்ற குற்றங்களைப் புரிந்ததாகக் கருதப்படுபவர்கள் சார்பில் வாதாட வேண்டியது அவர் பணியாயிற்று. விஜயராகவாச்சாரியார் போலன்றி ஸி. ஆர். கிரிமினல் வழக்குகளிலேயே விசேஷக் கவனம் செலுத்தினார். பன்னிரண்டு வயதான கிருஷ்ணசாமி தன் தகப்பனார் நீதி மன்றத்தில் தம் திறமையைக் காட்டுவதைப் பார்த்தபோது, ''என்ன வேலை இது? சதா நின்றுகொண்டே இருக்கிறாரே?'' என்றுதான் நினைத்தான்.[1]

சிறுவனின் மனம் அதைப் பெரிதாக மதிக்கவில்லை. ஆனால் உண்மையில் ஸி. ஆர். குறிப்பிடத் தக்க வெற்றிகளைப் பெற்று வந்தார். சில ஆண்டுகளுக்குச் சக வழக்கறிஞராக விளங்கிய ஒருவர், ''ஸி. ஆர். தாம் எடுத்துக்கொண்ட வழக்குகள் எல்லாவற்றிலும் வெற்றி பெற்றார்'' என்கிறார்.[2]

இது ஒருவேளை மிகைப்படுத்திக் கூறுவதாக இருக்கலாம். என்றாலும், ஸி. ஆர். இருக்கிறார் என்ற தைரியத்தில் கொலையும் கொள்ளையும் சேலம் மாவட்டத்தில் அதிகரித்து வருவதாக ஒரு கூற்று அக்காலத்தில் பரவியது உண்மையே.

1919ம் ஆண்டில் மதுரை ராஜத் துவேஷ வழக்கின்போது தென்னாடு முழுவதன் கவனத்தையும் கவர்ந்தார் ஸி. ஆர். அது பற்றிப் பதிவாகியுள்ள விவரங்களில் ஒரு பகுதி இந்த நூலில் பின்னால் இடம் பெறுகிறது. எனினும் சேலம் நீதிமன்றங்களில் ஸி. ஆர். வழக்குரைத்தது பற்றிப் பதிவாகியுள்ள விவரங்கள் ஏதும் கிடைக்கவில்லை.

### வழக்குரைக்கும் பாணி

எனவே, சேலம் நீதிமன்றங்களில் ஸி. ஆரின் சாதனைகளுக்குச் சரியான முறையில் மாதிரி காட்ட முடியாது. என்றாலும் அவர் தம் ஆற்றலை வெளியிடுவதை நேரில் பார்த்த வழக்கறிஞர்கள் கூறுவதைக் கொண்டு அவர் வழக்காடும் பாணியைச் சித்திரிக்கலாம்.

மிருதுவான குரல், தெளிந்த சிந்தனை, சுற்றி வளைக்காத தீர்மானமான வாதங்கள், அழுத்தம் திருத்தமாக அவற்றை வெளியிடும் திறன், சக்தி வாய்ந்த பரிந்துரைகள்— கறுப்பு அங்கியும் தலைப்பாகையும் அணிந்த ஸி. ஆர். பேச எழுந்த மாத்திரத்திலேயே நீதிமன்றத்தில் ஜீவ களையைத் தோற்றுவித்துவிடுவார்.

அவருடைய அனுபவம் மிக்க சக வழக்கறிஞர் விஜயராகவாச்சாரியார், அழகான வார்த்தைகளையும் சொற்றொடர்களையும் பயன்படுத்தி விரிவாகப் பேசுவார். ஸி.ஆரின் வாதங்களோ சுருக்கமாகவும் ஆணித்தரமாகவும் அமைந்திருக்கும். குறுக்கு விசாரணையில் பயமுறுத்தலை விட மதி

---

1. ஸி. ஆர். கிருஷ்ணசாமி நூலாசிரியரிடம் கூறியது.
2. சட்ட நிபுணர் வி. எஸ். பாஸ்கர் நூலாசிரியரிடம் பேட்டியின்போது கூறியது, நவம்பர் 1974.

நுட்பமே நிலவும். ஆனால் அது எதிராளியை ஒரேயடியாக வீழ்த்தி விடும்.

சாதாரண வழக்குகளில் மட்டுமின்றிக் கொலை வழக்குகளில் கூட அவர் சிற்சில கேள்விகளே கேட்பார். அவற்றுள் சில சம்பந்தமற்ற சாதுக் கேள்விகளாகவும் தோன்றும். எனினும் இக் கேள்விகளுக்குக் கிடைக்கும் பதில்களிலிருந்து உருவாகும் சித்திரம் அரசுத் தரப்பு வழக்கைத் தகர்த்து விடுவதே சகஜமாயிருந்தது.[3]

அரசுக்குச் சொந்தமான கானகத்தில் விறகு வெட்டியதாகக் குற்றம் சுமத்தப் பட்டு நின்றார் வி. ஆரின் கட்சிக்காரர். கானக அதிகாரி எந்த நேரத்தில் குற்றவாளியைச் சுற்றி வளைத்துப் பிடித்ததாகக் கூறினாரோ அதே நேரத்தில் அவர் தம் வீட்டில் மனைவி மக்களுடன் உல்லாசமாகப் பொழுது போக்கிக் கொண்டிருந்ததாக அவரையே ஒப்புக்கொள்ள வைத்தார் வி. ஆர்.[4] கானக அதிகாரியை இவ்விதம் ஒப்புக்கொள்ள வைத்தது வி. ஆருக்குக் கடினமான காரியமாக இல்லாது போயிருக்கலாம். என்றாலும் வி. ஆரின் தொழில் நுணுக்கம் இதை விட முக்கியமான வழக்குகளிலும் இதே அளவுக்குப் பயனளிப்பதாக இருந்தது.

**''கிட்டத்தில் நெருங்க முடியாது கிராண்ட் !''**

தன் அன்பு மைந்தனைப் பற்றிப் பெருமையுற்ற சேலம் வட்டாரம் சீக்கிரமே, ''நியூஜெண்ட் கிராண்ட் கூட குறுக்கு விசாரணையில் வி. ஆருக்குக் கிட்டத்தில் நெருங்க முடியாது''[5] என்று சாதித்தது. பிரிட்டனிலிருந்து வந்தவரான நியூஜெண்ட் கிராண்ட், சென்னை நீதி மன்றங்களில் கிரிமினல் சட்ட நிபுணராக அபரிமித செல்வாக்குப் பெற்று விளங்கினார்.

கூர்ந்த மதியும் சாதுர்யமான உரையாடல் திறனும் கொண்டிருந்த வி. ஆர்., ஆங்கில மொழியைக் கையாண்ட விதத்தால் மற்ற அனைவரையும் முந்தி முன் நின்றார். நீதிமன்றத்தில் நடந்து கொள்ளும் விதத்தில் ஒரு தனித் தன்மை[6]; வற்புறுத்துவதில் திறமை[7]; எதிர்த் தரப்பு வழக்கில் பலவீனமான அம்சங்களை உள்ளுணர்வாக அறிந்து தாக்கும் சக்தி[8] ஆகியன வி. ஆரிடம் காணப்பட்ட இதர குண நலன்கள்.

இவற்றுடன் ஞாபக சக்தியும் மிகுதி. கோயமுத்தூரில் இவர் ஒரு நீதிபதியின் முன் ஆஜரானார். வழக்கின் ஆரம்பத்தில் பலப் பல தஸ்தாவேஜுகளை நீதிபதி முன் சமர்ப்பித்து, அவற்றின் தேதிகளையும் விவரங்களையும் சொல்லி, அவை வழக்கில் எங்ஙனம் தொடர்புடையன என்பதையும் தெளிவு படுத்தினார். நீதிபதி, ''உன் கரத்தில் குறிப்புக்கள் அடங்கிய ஒரு தாளைக்கூட வைத்துக் கொள்ளாமல் இத்தனை அம்சங்களையும் எப்படி உன்னால்கூறமுடிகிறது?'' என்று கேட்டபோது, வி. ஆர். தம் நெற்றியை ஆள்காட்டி விரலால் தட்டிக் காண்பித்து, ''என் குறிப்புக்கள் இங்கே உள்ளன'' என்றார்.[9]



வி. ஆர். தமது சேலம் நாட்களின் இறுதிக் கட்டத்தில் வாதாடிய மோகனூர் சுவீகார வழக்கு கணிசமான சுவாரசியத்தை ஏற்படுத்தியது. நாமக்கல் தாலுக்கா மோகனூர் கிராமத்தில் செல்வந்தரான நிலக்கிழார் வேதாந்தாச்சார் தாம் வயோதிகப் பருவத்தை அடைந்து விட்டதால் தமது ஈமச் சடங்குகளைச் செய்ய ஒரு மகன் வேண்டும் என்று விரும்பினார். எனவே அவர் தூரத்து உறவினனும் மைனர் பையனுமான ஓர் ஏழையைச் சுவீகரித்துக் கொண்டிருந்தார். வேதாந்தாச்சாரின் மரணத்துக்குப் பிறகு அவர் மனைவி அந்தச் சுவீகாரம் நடந்ததாகவே ஒப்புக்கொள்ள மறுத்துவிட்டாள். இதன் விளைவாகத் தொடுக்கப்பட்ட வழக்கில் அந்த விதவை விஜயராகவாச்சாரியாரைத் தன் சார்பில் வாதாட அமர்த்திக்கொண்டாள். மைனர் சிறுவனின் இயற்கைத் தகப்பனார் வி. ஆரை அமர்த்திக் கொண்டார்


வி. விஜயராகவாச்சாரியார்

**வாழ்க்கை வரலாறு**

**ராஜ்மோகன் காந்தி**

வி. ஆர். கவிகாரம் நடந்தது உண்மை என்றும் அது செல்லும் என்றும் நிரூபிப்பதில் வெற்றி கண்டார்.

## நீதிபதிகளும் கட்சிக்காரர்களும்

ஒரு வழக்கறிஞர் எடுத்த எடுப்பிலேயே வழக்கு முழுவதையும் நீதிபதி முன் படம் பிடித்துக் காட்டி விடக் கூடாது என்பதும் படிப்படியாக வழக்கின் விவரங்களினூடே நீதிபதியை முன்னேற்றிக் கொணர்ந்து, உண்மையைத் தாமே கண்டுபிடித்து விட்டதாக அவர் உணரும்படி செய்ய வேண்டும் என்பதும் வி. ஆரின் கருத்து.[10] இதன்படி அவர் செயலாற்றவும் செய்தார் என்பது தெளிவு.

வி. ஆர். வழக்குரைப்பதைக் கேட்ட நீதிபதிகளில் சிலர் சில சமயங்களில் தூங்கு மூஞ்சிகளாகவும், கோபக்காரர்களாகவும்[11] விளங்கினர் என்றாலும் வி. ஆரை மதித்தனர். ஐரோப்பிய நீதிபதிகளுக்கு அவரது சுருக்கமான குறுக்கு விசாரணைகளும் நேரடியாக விஷயத்தை அணுகும் பாணியும் பிடித்திருந்தன.[12]

பொதுவாகக் கட்சிக்காரர்கள் வி. ஆர். வழக்கைக் கையாண்டால் வெற்றி நிச்சயம் என்று கருதினார்கள்.[13] என்றாலும் பல துறைகளிலும் தமக்கு இருந்த ஈடுபாடுகள் காரணமாக வி. ஆர். அடிக்கடி தம்மிடம் வந்து சேர்ந்த கட்சிக்காரர்களைப் பிற வழக்கறிஞர்களிடம் அனுப்பி வைத்தார். அவர்கள் தம்மை விடக் கெட்டிக்காரர்கள் என்று அவர் வர்ணித்தது அடக்கமாக இருக்கலாம், ஆனால் அதை உண்மை என்று கூற முடியாது.

அவரால் கையாளப்படாத முக்கியமான செஷன்ஸ் வழக்கு அல்லது கிரிமினல் அப்பீல் வழக்கு எதுவும் இருக்கவில்லை என்று தெரிகிறது. கீழ்க் கோர்ட்டுகளில் வழக்கைத் தோற்றுவிட்ட வக்கீல்கள், அப்பீலை வி.ஆர். நடத்த ஒப்புக் கொண்டு விட்டால் போதும் வேறு எதுவும் தேவையில்லை என்று கருதினார்கள்.[14]

தமது தொழிலில் வி. ஆர். பிரகாசித்தார் என்பது மட்டுமின்றி அதனை நேசிக்கவும் செய்தார். எனினும் இத்தொழிலில் பேராசை புகுந்து கொள்கிறது என்பதையும் வழக்கறிஞர்கள் அடிக்கடி சண்டைகளை வளர்த்துக் கொண்டே போகிறார்கள் என்பதையும் அவர் உணர்ந்திருந்தார். "ஒரு கட்சிக்காரர் வக்கீலிடம் வருவது அவர் ஏற்கெனவே ஏதோ கஷ்டத்தில் இருப்பதால் தான்; அந்தக் கஷ்டத்தைப் பயன்படுத்திக் கொண்டு ஒரு வக்கீல் அவரிடமிருந்து எவ்வளவு பணம் கறக்கலாம் என்று பார்ப்பது அதர்மம்" என்று கூறுவார் வி. ஆர்.[15]

பிற்காலத்தில் சேலம் வழக்கறிஞர் வட்டாரத்தின் ஒரு தலைவராக விளங்கிய கே. நரசிம்ம அய்யங்கார் வி. ஆரிடம் ஜூனியராகச் சேர்ந்தபோது யதார்த்த ரீதியான ஓர் அறிவுரையைப் பெற்றார். "எந்த ஒரு வழக்குக்கும் உன் கட்டணத்தை முன்கூட்டியே நிர்ணயித்துக் கொள்" என்றார் வி.ஆர். "இல்லாது போனால் வழக்கில் வெற்றி பெற்றவுடனேயே கட்சிக்காரர் உன் திறமையைப் பற்றிக் குறைவாகவும் உனக்குத் தரவேண்டியிருக்கும் பணத்தைப் பற்றி அதிகமாகவும் எண்ண ஆரம்பித்து விடுவார்."[16]

ஒரு வழக்குக்கு மொத்தமாகக் கட்டணம் பேசிவிடுவதுதான் வழக்கமாக இருந்தது. ஒவ்வொரு முறையும் நீதிமன்றத்தில் ஆஜராவதற்கு இவ்வளவு என்று பெறுவதில்லை. இம்முறையை வி. ஆரும் அனுசரித்தார். அவர் வசூலித்த தொகை அதிகம்தான். ஆனால் அவர் மேற்கொண்ட வழக்குகளின் எண்ணிக்கை குறைவு.

## நீதிமன்றத்துக்கு வெளியே உடன்பாடு

சிவில் வழக்கு எனில் நீதிமன்றத்துக்கு வெளியே உடன்பாடு காண்பதை அவர் அடிக்கடி வற்புறுத்துவார். இதில் அதிசயப்பட ஏதுமில்லை. இதற்கு வசதி அளிப்பதற்காகவே அவரும் அவரது நண்பர் பீ. வி. நரசிம்ம அய்யரும் சமரசக் குழு ஒன்றைத் தோற்றுவித்தார்கள். அதனை அரசு அதிகாரிகள் அல்லாத அந்த வட்டாரத்தின் மரியாதைக்குரியவர்கள் நிர்வகித்தனர்.

குற்றம் புரிந்தவர்களே எனினும் அவர்களுக்கும் நீதிமன்றத்தில் வழக்காட உரிமை உண்டு என்பதில் நம்பிக்கை கொண்டிருந்த வி. ஆர்., தமது ஆற்றலால் பல குற்றவாளிகளைக் காப்பாற்றியுள்ளார் என்பதில் ஐயமில்லை.

அத்தகைய நபர்கள் எல்லோருமே தமது பாவங்களுக்காக வருந்தித் திருந்தினார்கள் என்று கூற முடியாது. தூக்குமேடையி

3. சேலம் வழக்கறிஞர் எஸ். விஜயராகவாச்சாரியார் பேட்டியின் போது கூறியது, 1973.
4. பம்பாய், பவன்ஸ் ஜர்னலில் ஆர். சுந்தரம் எழுதியது, டிசம்பர் 21, 1975, பக்கம் 48.
5. எஸ். விஜயராகவாச்சாரியார் பேட்டியின் போது கூறியது, 1973.
6. சேலம் வழக்கறிஞர் டி. வி. லக்ஷ்மி நாராயணராவ் பேட்டியின் போது கூறியது, 1973.
7. கிருஷ்ணகிரி வழக்கறிஞர் பி. டி. வேங்கடாச்சார் நூலாசிரியரிடம் கூறியது, 1973.
8. வி. எஸ். பாஸ்கர், வி. ஆர். நரசிம்மனுக்கு எழுதிய கடிதத்தில், 19-5-73.
9. ராஜாஜி-93, பக்கம் 66, கே. எஸ். ராமசாமி சாஸ்திரி எழுதிய கட்டுரை.
10. ஆர். வி. கிருஷ்ணய்யர் நூலாசிரியரிடம் கூறியது, 1973.
11. யங் இந்தியாவில் வி. ஆர். எழுதியது, ஜூலை 5, 1923.
12. பி. டி. வேங்கடாச்சார் நூலாசிரியரிடம் கூறியது, 1973.
13. வி. எஸ். பாஸ்கர், வி. ஆர். நரசிம்மனுக்கு எழுதிய கடிதத்தில், 19-5-73.
14. வி. எஸ். பாஸ்கர் நூலாசிரியரிடம் கூறியது, 1974.
15. ஆர். வி. கிருஷ்ணய்யர் கூறியது.
16. கே. என். சுந்தரராஜன் பேட்டியின் போது கூறியது, 1973.

# ஹார்லிக்ஸ்

## ஒவ்வொரு நாளும் ஆரோக்கியத்தைப் பாதுகாத்து, எதிர்ப்புச் சக்தியை வளர்க்கும் ஊட்டச் சக்தி.

ஒவ்வொரு நாளும் ஹார்லிக்ஸ் அருந்தினல், அது உங்கள் குடும்பத்தினருக்கு எதிர்ப்புச் சக்தியை வளர்க்கும் ஊட்டச் சக்தியை அளித்து, அவர்களை பூரண ஆரோக்கியத்துடன் விளங்கச் செய்கிறது.

உலகமெங்கிலும் டாக்டர்களால் சிபாரிசு செய்யப்படுவது ஹார்லிக்ஸ் ஒன்றுதான். தனிச்சிறப்பு மிக்க ஹார்லிக்ஸ் செய்முறை, ஹார்லிக்ஸில் அடங்கியுள்ள சத்துமிக்க, சுத்தமான பொருள்களை கலக்கும்பொழுது, அவற்றிலுள்ள இயற்கையான, நல்ல தன்மைகளை நிறுத்தி, அவற்றை எளிதில் ஜீரணிக்க வகை செய்கிறது. அதனல், மிகுந்த அளவில் ஊட்டச்சக்தியை அளிப்பதும் ஹார்லிக்ஸ் ஒன்றுதான்.

அதனலேயே, சுசித்ரா ஹார்லிக்ஸை தனது குடும்பத்தினரது வாழ்க்கையின் ஒரு அம்சமாக்கி இருக்கிறள்.

சுசித்ராவைப் போன்றே, உங்கள் குடும்பத்தினருக்கும் ஒவ்வொரு நாளும் ஹார்லிக்ஸ் அளித்து, அவர்கள் ஆரோக்கியமாகவும், வலுவுடனும் வளருவதைக் கவனியுங்கள்.

"ஊட்டச்சத்திற்கு ஹார்லிக்ஸ் ஒரு முக்கியமான மூலப்பொருள். உங்களுடைய குடும்பத்தினரின் எதிர்ப்புச் சக்தியை வளர்க்கவும், அவர்களை ஒவ்வொரு நாளும் ஆரோக்கியமாக வைத்திருக்கவும் நான் ஹார்லிக்ஸையே சிபாரிசு செய்கிறேன்".



**ஹார்லிக்ஸ்** முழுமையான ஊட்டம்பெற

நாள் முழு
வதும் நீடிக்கும்
நறுமணத்
திற்கும் சருமப்
பாதுகாப்பிற்கும்

**ராதாஸ்**
**ஆயுர்வேத சோப்**

குளிர்ச்சியும்,
நறுமணமும் தரும்
இந்த ஆயுர்வேத
சோப் ராமச்சம்,
கஸ்தூரி மஞ்சள்,
கச்சோலம், ஓமம்,
மரவெட்டி எண்ணை
ஆகியவைகளால் தயார்
செய்யப்படுவது.
மிருகக் கொழுப்புச்
சத்தோ, செயற்கை
மணமோ கலவாதது.







தூய்மையான மேனி அழகுக்கு பரிசுத்தமான சோப்

'Sobhagya-RAS-77-3|TM'

லிருந்து ஸி. ஆரால் காப்பாற்றப்பட்ட ஒரு கட்சிக்காரன் அவரை ஒரு நாள் அணுகி, ''ஐயா, என் கத்தியைத் திரும்பப் பெற விரும்புகிறேன்; அது என் குடும்பத்தில் பரம்பரையாக வந்தது'' என்றான். ஸி. ஆர். அவனை விரட்டி விட்டார். அவன் மீது அவருக்கு ஒரே கோபம். அதோடு, தம்மீதே, தமது தொழிலின் மீதே கோபம்.

அந்தச் சந்தர்ப்பத்தில் அவர் கூறினாராம்: ''ஒரு விலைமாது தன் உடலை ஒரு தொகைக்கு விற்பதை என்றால் புரிந்து கொள்ள முடிகிறது. அதை என்றால் மன்னிக்கவும் முடியும். ஆனால் தன் அறிவை விலை பேசுகிற ஒரு வழக்கறிஞரை என்னால் மன்னிக்கவே முடியாது. இந்தத் தொழிலை விட்டுவிடுகிற நாளை நான் ஆவலுடன் எதிர் பார்க்கிறேன்.''17

அவர் தமது தொழிலை இப்படி ஒரேயடியாகத் தாக்கியது, ஆழ்ந்த யோசனைக்குப் பிறகு பிறந்த அபிப்பிராயமாக இருக்க முடியாது என்றாலும் அவரது மனச் சாட்சி கேள்விகளை எழுப்பிக் கொண்டிருந்தது என்பது தெளிவு. வேறு ஒரு காரணத்துக்காகத் தான் எனினும் அவர் சட்டத் தொழிலை விட்டுவிடுகிற காலமும் சீக்கிரமே வரத்தான் செய்தது. (தொடரும்)

தமிழாக்கம்: இ. ராஜேந்திரன்

17. ராஜாஜி-93, பக்கம் 220A., வி. பி. ராமன் எழுதிய கட்டுரை).






● சித்திரைச் சிறப்பிதழில் வெளியாகிய ஆர். சூடாமணியின் பிம்பம் மிக அருமை. இன்றைய சமுதாயத்தில் நடுத்தரக் குடும்பத்துப் படித்த பெண்ணின் மனநிலையைப் படம் பிடித்துக் காட்டுகிறது. உண்மையில் இத்தகைய நிலைமையால் ஆக்கபூர்வமான அறிவு வளர்ச்சியே பெண்ணிற்கு எதிரியோ என நினைக்கத் தோன்றுகிறது. இதனால் தனக்கென ஒரு 'Individuality'யை வளர்த்துக் கொள்ளும் அவள் பின்னர் அதுகட்டாயமாகக் கட்டுப்படுத்தப்படுகையில் மனக் கிலேசம் அடைகிறாள். இதைவிட ஒன்றுமே அறியாமல் இருப்பின், எதிர் பார்ப்புக்களும் இல்லை; ஏமாற்றங்களும் இல்லை.

சென்னை-40
17-4-77 — ஆர். வனிதா

● இன்று வெள்ளிக்கிழமை. ''அந்த வெள்ளிக் கிழமையன்று'' எனும் சிறப்புச் சிறுகதை படித்தேன். சித்திரைச் சிறப்பிதழில் தம் முத்திரையைச் சிறப்பாகவே பதித்திருக்கிறார் கதையாசிரியர் ஜீ. நாராயணன்.

15-4-77
விருத்தாசலம் — வெ. சம்பந்தம்

● திரு ஏ.பி.என். பற்றிய துணைத் தலையங்கம் பார்த்தேன். ராஜாஜியின் பாராட்டுக்குப் பாத்திரமான சம்பூர்ண ராமாயணத்தை இயக்கிய பெருமை என் தந்தை திரு கே. சோமு அவர்களையும் அருமையான வசனங்களை எழுதிச் சிறப்பித்த பெருமை திரு ஏ.பி. என். அவர்களையும் சேரும் என்பதைத் தெரிவிக்க விரும்புகிறேன்.

சென்னை-34
14-4-77 — சோ. மு. நடராசன்

● தொழிற்சாலைகள் நிறைந்த நகர்ப்புறங்களைப் போலவே கிராமப்புறங்களிலும் சுற்றுப் புறச் சூழல் விஷமயமாகி விடுவது சாத்தியம் தான். இதனை திரு பி. கே. ஸ்ரீவத்ஸவா எக்ஸ்பிரஸ் கட்டுரை ஒன்றில் அதிர்ச்சியூட்டும் வகையில் சொல்கிறார். உற்சாகம் மிக்க உழைப்பாளிகளான பஞ்சாபி விவசாயிகள் பசுமைப் புரட்சியில் அதி தீவிரமாக ஈடுபட்டு, அதற்காகத் தங்கள் நிலங்களில் நிறைய நைட்ரேட் உரங்களைப் போட்டனர். நிறையவே தானியம் விளைந்தது. கூடவே குடி நீரும் விஷமயமானது! கிராமங்களில் பெரும்பாலும் கிணற்று நீரே குடிநீராகப் பயன்படும். நைட்ரேட் உர வகைகள் ரசாயன மாறுபாட்டால் நைட்ரைட்டாக மாறி, குடி தண்ணீரில், அதாவது நிலத்தினூடே உள்ள கிணறுகளில் தண்ணீரில் கலந்து விட்டது. குடி தண்ணீர் விஷமயமாகி இருக்கிறது. அத் தண்ணீரைக் குடிக்கும் கிராமவாசிகளில் பெரும்பாலோர் மிகக் கடுமையான அல்சர், மற்றும் வேறு வகை உணவுக் குழாய் நோய்களுக்கு ஆளாகியுள்ளனர். இந்நோய்களுக்கு ஆளான மக்களின் எண்ணிக்கை, சிகிச்சை செய்யும் டாக்டர்களை மலைக்க வைக்கும் அளவுக்கு அதிகமாக இருப்பதாகவும் திரு ஸ்ரீ வத்ஸவா தம் கட்டுரையில் சொல்கிறார்.

ஈகாலஜி அல்லது சூழ்நிலை ஆராய்ச்சி என்ற விஞ்ஞானப் பிரிவில் மேநாடுகள் மிகுந்த அக்கறை காட்டுகின்றன. நாம் இன்னும் சிரத்தை எடுத்துக் கொள்ளாமலே இருந்து வருகிறோம். நவீன ரசாயன உரங்களையும், பூச்சி கொல்லி மருந்துகளையும் கண்மூடித்தனமாக உபயோகித்தால் உணவு உற்பத்தி பெருகலாம். கூடவே இவற்றால் ஏற்படும் கேடுகளும் பெருகும். நிலம் விரைவில் சத்தற்றதாகி விடும். விவசாயிகளுக்கு இவ் விஷயத்தில் சரியான யோசனைகள் கூறப்பட வேண்டும்.

சென்னை—40
15—4—77 — எஸ். அனந்தராமன்

● உமாசந்திரன் அவர்கள் நீண்ட நாட்களுக்குப்பின் எழுதியிருக்கும் ''டஸ்டர்'' கதை சித்திரைச் சிறப்பிதழுக்கு சிறப்புச் செய்கிறது.

பலமுறை படித்தும் நெஞ்சில் இனம்புரியா சோகம் மறைய மறுக்கிறது.

திருப்பூர்
14-4-77 — பாரதி தேவராஜன்

அரிய கலைக் கூடமாக விளங்கும் ஆயிரக்கால் மண்டபத்தை, தளவாய் அரியநாத முதலியார் 1569ம் ஆண்டு கட்டினார்.

ஆயிரக்கால் மண்டபத்தில் இருக்கும் கால்கள் 985. மீதிப் பதினைந்து கால்கள் அல்லது தூண்கள் இருக்க வேண்டிய பகுதியில் சிறிய கோயில்கள் இருக்கின்றன.

மண்டபத்தின் நீளம் 250 அடி. அகலம் 240 அடி.

## 18

நீலா வெளியேறிய பிறகு வீட்டிலே திடீரென்று ஓர் அமைதி பிறந்தது. பூர்ணம் அசைவற்று நின்றான். கண் முன் அப்பா தோன்றினார். மரணப் படுக்கையில் கிடக்கிறார். பூர்ணம், அவருடைய பிராணன் இன்னும் இழுபறியாகவே இருக்கிறது என்று யோசிக்கிறான். திடீரென்று அப்பா அழைக்கிறார். அவன் குனிந்து அவர் அருகே நிற்கிறான். பூர்ணம் என்ன செய்தால் அவர் மனம் குளிரும் என்று அப்பா முக்கி முனகிக் கொண்டே கூறுகிறார்.

இப்போது அத்தை சீதாமணி சொல்லுகிறாள், கடைசி ஆசைகளைப் பூர்த்தி செய்ய வேண்டும் என்று!

பூர்ணத்துக்குத் தலை சுற்றியது. அவனுடைய சபரி மலை ஐயப்பன் என்னவாகிறது? தமிழ் நாட்டுக் கோயில்களில் உறைந்து கிடக்கும் தெய்வங்கள், அவன் மனம் மாறினால் விழித்தெழுந்து விடாதா?

''என்னடா பூர்ணம், ஏன் அசந்து போய் நின்னுட்டே?''

''பகவானின் திருவிளையாடலை நெனைச்சுப் பார்த்தேன். அப்படியே நின்னுட்டேன்!''

அவன் தன் மனம் இலேசாக மாறுவதற்குக் கடவுளின் திருவிளையாடல்தான் காரணம் என்று உள்ளூற நம்பினான். ஆனால் இந்தத் திருவிளையாட்டைப் பகிரங்கமாக இப்பவே சொல்ல அவன் விரும்பவில்லை.

''என்ன திருவிளையாடல்?'' என்று கேட்டாள் சீதாமணி.

''நீங்கள் எல்லாரும் மெட்ராஸிலே குடியேறணும்னு நான் ஆசைப்பட்டேன். ஆனால் அந்தச் சுந்தரேசுவரர் என்ன பண்ணி விட்டார், பார்த்தேளா, அத்தே... நீலாவுக்கு இங்கேயே ஒரு வேலையை வாங்கிக் கொடுத்து என்னோட மதுரையை விட்டுப் போகப்படாதுன்னுட்டார்!''

''வாஸ்தவம்டா, பூர்ணம்!'' என்றாள் சீதாமணி. பிறகு, ''நீ கோயிலுக்குப் போகலையா?'' என்று கேட்டாள்.

அவன், ''இதோ போறேன்'' என்று நகர்ந்தான். அதே சமயம், ''மாமி கங்க்ராஜுலேஷன்ஸ்!'' என்று கத்திக் கொண்டே மொட்டை வந்து சேர்ந்தான்.

''எதுக்குடா மொட்டை?''

''நீலாவுக்கு வேலை கிடைச்சாச்சு... சுந்துவுக்குக் கிடைக்கப் போறது... லாவண்யாவுக்கும்... அடேடே, பூர்ணம்! நீ நேத்தே பாண்டியனிலே ஏறலையா?'' என்று மூச்சு விடாமல் பேசினான் மொட்டை.

''உனக்கு எப்படித் தெரியும், நீலாவுக்கு வேலை கிடைச்சாச்சுன்னு?''

''இதென்ன மாமி இப்படிக் கேட்கிறேள்... நீலா முதல்லே எங்கிட்டேதானே சொல்லுவாள்... ஸ்டேட் பாங்கிலே செலான் கட்ட நின்னுண்டிருந்தேன்... ராமையா ஆபீஸ்லேந்து நேரே அங்கே வந்து சொன்னா... அப்புறம் இங்கே உங்கிட்டே சொல்ல வந்தா... இப்போ என் அம்மாவைப் பார்க்க ஓடியிருப்பாளே!''

''ஓடினா, ஓடினா!'' என்றான் பூர்ணம்.

''ஏதோ, பாவம், அவளுக்கும் ஒரு வழி ஏற்பட்டுது... ரமணி புண்ணியம் கட்டிண்டான்....'' என்ற சீதாமணி, ''மொட்டை, நீ எனக்கு ஒரு உபகாரம் செய்யணும்'' என்று ஆரம்பித்தாள்.

''என்ன மாமி, சொல்லுங்கோ, ஃபீஸ் இல்லாமக் கியூவிலே நிக்கணும்னாலும் தயார்!''

''பூர்ணம் எங்களை மெட்ராஸுக்குக் கூப்பிடறான்... அவன் வீட்டிலே இருந்துண்டு அடையாறு ஆஸ்பத்திரியிலே ஆபரேஷனை வைச்சுக்கலாம்னு உத்தேசம்.''

''அதுக்கு நான் என்ன பண்ணணும்?... டிக்கெட் வாங்கிக் கொடுக்கணுமா?''

''அதெல்லாம் வேண்டாம். நாங்க இங்கே இல்லாதப்போ நீதான் என் குழந்தைகளையெல்லாம் கவனிச்சுக்கணும். இங்கே வந்து துணை இருக்கணும்.''

# மதுர நாயகி

பி.வி.ஆர்





'தன் பொருள்' என்று உரிமை கொண்டாடினால், அந்த உரிமை அவனுக்கு நல்ல பெயரையா சம்பாதித்துக் கொடுக்கும்?

இப்போது ரமணியைப் பொறுத்த மட்டில் ஓர் அத்தியாயம் முடிவு பெற்று விட்டது. இந்த முடிவு நிலை பிறந்த பிறகுதான் ரமணிக்கு என்று ஓர் அத்தியாயம் ஆரம்பிக்கப் பட்டிருக்கிறது என்ற உணர்வே அவளுள் எழுந்தது. இனிமேல் ரமணி ஏதாலும் பேச வந்தால், ஓர் அன்னியனிடம் பேசுவதுபோல் அவள் நடந்து கொள்ளலாம்.

பஸ் வரவில்லை. ஆனால் அவள் சற்றும் எதிர்பாராத வகையில் கிஷு மொட்டை வந்தான். அவனுடைய தன்னம்பிக்கையும், கள்ளம் கபடமற்ற குணமும் எப்போதுமே அவளை ஈர்த்தன. ஏன், அவனுடைய முரட்டு கபரிவமும் கூட இனித்தது.

''ஹலோ மிஸ் லாவண்யா! சௌக்கிய மெல்லாம் எப்படி?''



ராமசாமி: கோயிலில் கற்பூரம் ஏற்றும்போது நாம் கன்னத்தில் ஏன் தப்பும் போட்டுக் கொள்கிறோம்?
முனுசாமி: மற்றவர்கள் கன்னத்தில் தப்பும் போட்டால் உதைக்க வருவார்கள். அதனால்தான் நம் கன்னத்திலேயே போட்டுக் கொள்கிறோம்! -ச

''நேத்துத்தானே பார்த்தோம்? அதுக்குள்ளே சுகக் குறைவு வந்து விடுமா என்ன?'' சிரிப்பை வரவழைத்துக் கொண்டாள் லாவண்யா.

''நீ சிரிக்க ட்ரை பண்றே... சுகம் சௌக்கியம்னு அது உடம்பாலே மட்டுமா? மனசுக்கும் இருக்கே... அது சுகப்படவோ, துக்கப்படவோ கால நிர்ணயம் இருக்கா என்ன?''

''என் மனசு அடிக்கடி குழம்பும். ஆனா இப்போ அந்தக் குழப்பம் கூட இல்லே.''

''குட்.. வெரி குட்... உன் மாமா பிள்ளை பூர்ணத்தைக் கவனிச்சியா... ரிஷ்ய சிருங்கர் இவன் கிட்டே பிச்சை வாங்கணும்!''

''ஒவ்வொருத்தர் ஒவ்வொரு மாதிரி...''

''ஆனா பூர்ணம் ஒரு தனிக் கேஸ்... உன் அம்மாவும் அப்பாவும் மெட்ராஸ் போறதுன்னு முடிவாயிடுத்தாமே. பூர்ணம் சொன்னான்.''

''அம்மா என்கிட்டே இன்னும் எதையும் விவரமாப் பேசலே. இமர்னு சாவித்திரி, அதான் ரமணியோட அம்மா என்னை வரச் சொன்னா. அதான் வந்தேன். இப்ப திரும்பிப் போறேன்....''

''என்னவாம்?''

''நான் ஒரு கேள்விதானே. அவள் வழி தெரியாமத் தவிச்சிண்டிருந்தா...என்னை வழி கேட்டா... சொல்றதுக்குள்ளே எனக்கு வேறே வழியைக் காட்டிடறா.''

''விவரமாச் சொன்னாத்தான் புரியும் லாவண்யா.''

''ஒரு நாள் கண்டிப்பாச் சொல்றேன், மொட்டை!''

''நாளைக்கு வொர்க் இருக்கா?''

''இருக்கு. நாளன்னிக்கு இல்லே.''

''நான் உனக்கு ஒரு வேலை வாங்கித் தந்தா — அதுவும் எழுநூறு ரூபா சம்பளத்திலே — அதை ஏத்துப்பியா?''

''நீயும் என்னைப் போலப் படிச்சவன் தானே. நீயே அதை ஏத்துக்கறது!''

''இது லேடீஸ் ஸ்பெஷல்!''

மொட்டை சிரித்தான்.

''அப்படீன்னா என்ன வேலே?''

''நாளன்னிக்குச் சொல்றேன். எங்கே மீட் பண்ணலாம்? உன் வீடு வேண்டாம்.''

''உன் வீட்டுக்கு வரேன்.''

''குட்.. வெரி குட். என் அம்மா ரொம்பப் பெருமைப்படுவா... நல்ல டிபனா பண்ணி வைக்கச் சொல்றேன்.... சரியா நாலு மணிக்கு...''

''ஓகே...''

''அப்ப நான் வரேன், லாவண்யா!''

அவன் திரும்பிப் பார்க்காமல் விரைந்தான். அவனுடைய உருவத்தையே கண் கொட்டாமல் பார்த்தவளாய், ஒரு பஸ் நெருங்கிக் கொண்டிருப்பதையும் உணராமல் லாவண்யா நின்று கொண்டிருந்தாள். அவளையும் அறியாமல் கீழ் மொட்டை அவள் மனத்தில் நிறைந்து போனான்!

வீட்டை அடைந்தபோது அங்கே அம்மா, நீலா, கந்து யாருமில்லே. பூர்ணம் ஒரு சுவாமி படத்தின் கீழ் உட்கார்ந்திருந்தான். லாவண்யாவைக் கண்டதும் அவன் கண்களை மூடிக் கொண்டான். இதைக் கவனித்துவிட்ட லாவண்யா, மொட்டை சொன்ன ரிஷ்யசிருங்கரை நினைத்துக் கொண்டாள். ஏன் அந்த ஞான முனிவரை இப்படி அவமதிக்க வேண்டும்?

அவளுக்கு நெஞ்சு வறண்டது. சமையலறைக்குச் சென்று செப்புக் குடத்திலிருந்து தண்ணீரை எடுத்துக் குடித்தாள். அதன் பின்பும் நெஞ்சு உலர்ந்திருப்பது போலவே தோன்றியது. அவள் மீண்டும் சமையலறையை விட்டு வெளியே வந்தபோது, பூர்ணம் உட்கார்ந்திருக்கவில்லை. சுவாமி படத்துக்கு முன் கைகூப்பி நின்று கொண்டிருந்தான். தியானத்தின் கடைசிக் கட்டம் என நினைத்த லாவண்யா கண்ணில் தென்பட்ட பழைய பத்திரிகையை எடுத்து, நைந்துபோன டில்லி மோடாவின் மேல் அமர்ந்தாள். ரமணியின் வீட்டில் சாவித்திரியுடன் பேசியதோ, பஸ் ஸ்டாண்டில் சந்தித்த மொட்டையோ, அவன் வாங்கித் தருவதாகச் சொன்ன எழுநூறு ரூபாய் வேலையோ அவளுடைய சிந்தனையில் சிக்கவில்லை.

திடீரென்று என்றைக்கோ ஒரு நாள் அவளை அழகர் மலையில் மானபங்கம் செய்ய நினைத்த மேனாட்டு வெறியனின் நினைவு அவளுள் தோன்றியது. அவள் பாம்பு, பாம்பு என்று கத்தின கத்தல் காதில் திடீரென்று ஒலித்தது. ஜுவான் பயந்து ஓடி, கல் தடுக்கி விழுந்த காட்சி கண் முன் எழுந்தது.

லாவண்யா திகைத்தாள். ஏன் அந்த அரக்கனின் நினைவு இப்போது திடீரென்று வருகிறது? ஏறிட்டுப் பார்த்தாள். பூர்ணம் அவள் பக்கமாகப் பார்த்துக் கொண்டு நின்றான். அவனுடைய கண்ணிதழ்கள் சற்றே திறந்திருப்பதையும் கண்டாள். அந்த ஜுவான் வெளியே சிரிக்கச் சிரிக்கப் பேசி, தான் கல்மிஷமில்லாத மனிதன் என்று பறை சாற்றினான். இந்தப் பூர்ணம்? தன் உள்ளத்தில் பக்திக் கடல்தான் கொந்தளிக்கிறது என்று அலைவீசிக் காட்டி ஏமாற்றுகிறானா? இவனும் ஜுவானைப் போலத்தானா?

திடீரென்று ''குட் ஈவினிங், லாவண்யா!'' என்ற குரல் கேட்டது.

சிந்தனையிலிருந்து விழித்துக் கொண்ட லாவண்யா ஏறிட்டுப் பார்த்தாள். பூர்ணத்தின் கண்களில் அவள் கண்ட மிருகத்தின் பசி அவளை நடுங்க வைத்தது. அன்று அழகர் மலையில் ஜுவானைச் சமாளித்தபோது இருந்த தைரியம் அவளை விட்டு நழுவிப் போய்விட்டதோ என்ற பயம் எழுந்தது.

''மிஸ் லாவண்யா!''

மீண்டும் வந்த குரல் இப்போது ஜீவனற்று ஒலித்தது. ஆனால் லாவண்யாவின் இயல்பான தைரியம் — சற்றே நழுவிவிட்ட தைரியம் — மீண்டும் உயிர் பெற்று எழுந்தது.

(தொடரும்)

# அன்றும் இன்றும் சிலருக்கு அதே இளந்தளிர் மேனி!




கனிவான பியர்ஸ் சோப்பினால் காத்திடுவீர் உங்கள் மேனி மெருகை. மாணிக்கப் படிகம்போல் மினிரும் ஒவ்வொரு வில்லையிலும் ஒரு நூறாண்டு கால சோப்-உற்பத்தி அனுபவம் உள்ளிறங்கியுள்ளது. பிஞ்சு மென்மை சொருகும் பியர்ஸ்—தூய்மைக் கொழுந்து—கண்கூடாக நீங்கள் ஊடுருவிப் பார்க்கக்கூடிய உன்னதத் தூய்மை.

**பியர்ஸ் சருமக் களை...**
**கன்னிப் பருவக் களை**

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு.

லின்டாஸ்-PS. 56-140 TM

# மாயவரம்

# பைனான்ஷியல் கார்ப்பரேஷன் லிட்.

பதிவு அலுவலகம் :

**13-H, கச்சேரி ரோடு, மாயவரம் - 609001**

## நீண்டகால சீட்டுக்களின் பலன்கள்

1. ஐம்பது அல்லது நூறு மாதங்கள் என நீண்டகாலத்தில் எளிய தவணைகளில் பணத்தைச் செலுத்தி மொத்தமாக நிறைந்த தொகையைப் பெறுதல் சீட்டு முறைத் திட்டத்தால் ஏற்படும் நன்மையாகும். அது எல்லா நிலையினருக்கும் ஏற்றதாகும்.

2. ஏலம் எடுத்த தொகையை வியாபாரத்தில் முடக்கினால் / முதலீடு செய்தால் பெருமளவு லாபம் கிடைக்கும். அப்படிக் கிடைக்கும் லாபம் சீட்டுக்குரிய எஞ்சிய தவணைகளை எவ்வித சிரமமும் இன்றி எளிதில் கட்டவும் உதவியாக இருக்கும்.

3. சீட்டுக் கேள்விகளுக்கான வரையறை எல்லை இல்லை. எந்தக் கேள்விக்குத் தொகையளிக்கப்படலாம் என்பது முத்திரையிடப்பெற்ற உரிய ஒப்பந்தப் புள்ளிகளைக்கொண்டே முடிவு செய்யப்படுகிறது.

4. ஏலம் எடுத்த, எடுக்காத உறுப்பினர்களில் இடை நிறுத்தம் இல்லாமல் தொடர்ந்து கட்டிய அனைவரும் சீட்டின் பங்கீட்டு ஊதியத்தை அடைகிறார்கள்.

5. பகிர்வு ஊதியத்தில் இருபத்தி நான்கு சத விகிதம் உறுப்பினர்களுக்கெனத் தீர்மானிக்கப் பெற்றுப் பகிர்ந்தளிக்கப்பட்டு வருகிறது.

6. ஏலம் பெறும் வாய்ப்பிழந்த உறுப்பினர்களில் இறுதிவரை தவணைகளை முறையாகச் செலுத்தியவர்கள் சீட்டு நிறைவு பெறும்போது முழுத் தொகையினைப் பெறுகிறார்கள்.

7. எளிய தவணைகளில் நீண்ட காலத்தில் கட்டக்கூடிய ஏலத் தொகையினைப் பெறுவதன் மூலம் திருமணங்கள், பிள்ளைகளின் மேற்படிப்பு வீடு கட்டுதல், பெருமளவில் பழுது பார்த்தல், நெடுங்காலமாகத் தங்கிவிட்ட அடமானங்களை மீட்டுக் கொள்ளுதல் போன்றவற்றை எளிதில் நிறைவேற்றிக் கொள்ளலாம்.

**நடைபெறும் சீட்டுக்களின் விவரங்களுக்கு விண்ணப்பித்துக் கொள்ளவும்**

**R. கல்யாணசுந்தரம்**
மானேஜிங் டைரெக்டர்

# குட்மார்னிங் டாக்டர்:

# மூக்கிலே சளி! காதிலே வலி!



வீரிட்டு அழுது கொண்டிருந்த ஆறு மாதச் சிசுவைக் கையிலேந்திச் சமாதானம் செய்து கொண்டே உள்ளே நுழைந்த மீனு கூறினாள்: ''நேற்று முதல் குழந்தை கையில் பிடிபடாமல் அழுது கொண்டேயிருக்கிறாள். உடலில் எந்தக் கோளாறும் தென்படவில்லை. ஜலதோஷம், காய்ச்சல் ஏதுமில்லை.''

''இரவில் நன்றாகத் தூங்கினாளா?''

''இல்லை, டாக்டர். அவளும் தூங்கவில்லை. என்னையும் தூங்க விடவில்லை. திடீர், திடீரென்று அழ ஆரம்பித்து விடுகிறாள். காரணம் புரியவில்லை.''

''அழாமல் பால் குடிக்கிறாளா?''

''பால் குடிக்கும் போதுதான் அழுகை அதிகமாகிறது, டாக்டர்!''

குழந்தையை வாங்கி மேசையின் மீது படுக்க வைத்தேன். வலது கையினால் காதைத் தேய்த்தவாறு கதறி அழுதது. வெளிக்காது சிவந்திருந்தது. 'ஸ்பெகுலம்' மூலம் நான் குழந்தையின் காதுகளைப் பரிசோதித்தேன். வலது காதின் உட்புறம் ஒரு சிறு கட்டி இருப்பது தெரிந்தது. அதுதான் குழந்தை வீரிட்டு அழக் காரணம் என்று மீனுவுக்கு விளக்கி, மருந்து எழுதிக் கொடுத்து மறுநாள் குழந்தையை எடுத்து வரும்படி கூறினேன்.

**''காதில் உள்ள கொப்புளம் அல்லது கட்டி உடைந்து விட்டால் அல்லது அமுங்கி விட்டால் வலியும் மறைந்து விடுமல்லவா?''**

''ஆமாம். அதற்குத்தான் மருந்து கொடுத்தேன். குழந்தை பால் குடிக்கும் போது அழக்காரணம், தாடையை அசைப்பதால் காதில் வலி அதிகமாகிறது. கட்டி இருந்தால் வலிக்கிற மாதிரியே காதில் குறும்பை கெட்டியாகி அடைத்துக் கொண்டாலும் இப்படித் தான் வலிக்கும். குழந்தைகளுக்கு மட்டுமன்று. பெரியவர்களுக்கும் கூட வலி நிறைய இருக்கும். மூன்று பகுதிகள் கொண்டது, காது. வெளிக்காது, நடுப்பகுதி, உட்புறம். குறும்பைக் காதின் வெளிப்புறத்தில் இருந்து கொண்டு தொந்தரவு கொடுக்கும். அப்போது காது கேட்கும் சக்தியையும் இழக்கிறது. குறும்பைதானே என்று அலட்சியம் செய்து விடக் கூடாது. குறும்பையைக் குச்சி, ஊசி மூலம் எடுக்கவும் முயற்சி செய்யக் கூடாது. உட்புறம் குத்தி அதன் விளைவாகக் கட்டி அல்லது புண் ஏற்பட வாய்ப்பு உண்டு. உரிய மருத்துவரிடம் (ENT) சென்று காண்பிப்பது நலம். நடுக்காதில் தொந்தரவு ஏற்பட்டால் அதனை 'ஜவ்வு' (Drum) காட்டிக் கொடுக்கும்.''

''குறும்பை காதில் இருப்பது ஆபத்தானதா?''

''இல்லை. சிலருக்குக் குறும்பை மிகுதியாக ஏற்பட்டுத் தொந்தரவு கொடுக்கும். அவ்வளவே. குறும்பை ஏற்படுவது இயற்கைக்கு முரணானது அன்று. நடுக்காதில் புண் ஏற்படு



மானால், மூக்கிலிருந்து அது பரவியிருக்கக் கூடும். அடிக்கடி சளி பிடித்துக் கொண்டு மூக்கு சிந்துவதன் விளைவாக நடுக்காது பாதிக்கப்படலாம். குழந்தைகளுக்கு 'அடிநொய்ட்ஸ்' காரணமாகவும், வயிற்றுப்போக்கு காரணமாகவும் காது பாதிக்கப்பட வாய்ப்பு உண்டு. குரல்வளையில் புண் ஏற்படுதல் அல்லது 'டான்ஸில்' காரணமாகவும் காது வலி ஏற்படலாம். காது, தொண்டை இரண்டும் நரம்புகள் மூலம் இணைப்பு தொடர்பு உள்ள பகுதிகள். சளி பிடித்துக் கொள்ளும் போது மூக்கைச் சிந்துகையில் இரு நாசித் துவாரங்களில் ஒன்றைச் சிந்திய பிறகு மற்றொன்றைச் சிந்த வேண்டும். இரு நாசித் துவாரங்களையும் ஒரே சமயத்தில் சிந்தினால், காற்று வெளியே போக முடியாமல் அழுத்தம் ஏற்பட்டு, மூக்கில் உள்ள நோய்க் கிருமிகள் நடுக் காதுக்குள் செலுத்தப்படுகின்றன. அதனால் காது பாதிக்கப்படும்.

**டாக்டர் பி. பி. ராவ் கூறக் கேட்டு**
**எழுதியவர்: ஆர். பி.**

# ஸிங்கர்

## மெரிட்* தையல் மெஷின்கள் மீது

அளிக்கும்

# ரொக்கத் தள்ளுபடி

# ரூ.25 லிருந்து ரூ.125

மெரிட்* தையல் மெஷின்
ஒன்றை வாங்குங்கள்.
நீங்கள் தேர்ந்தெடுக்கும்
மெஷினைப் பொருத்து
உங்களுக்கு ரூ.25லிருந்து
ரூ.125 வரை ரொக்கத்
தள்ளுபடி கிடைக்கிறது.



## அல்லது

# 120 நாட்களில் பணத்தைத் தரவும்

—அதிகப்படி கட்டணம் எதுவுமில்லை
(பட்டியல் விலையைத் தான் கொடுக்கிறீர்கள்)

மேலும் கிடைக்கின்றன:
ஒவ்வொருவரின் வசதிக்கும் ஏற்ப எளிய தவணைமுறைகள்.

## குறிப்பிட்ட காலவரை மட்டுமே இந்தச் சலுகை உண்டு.

உங்கள் அருகாமையிலுள்ள ஸிங்கர் கடைக்கோ அல்லது
அதிகாரம் பெற்ற விற்பனையாளரிடமோ விரைந்து செல்லுங்கள்.

எப்போதும் ஸிங்கர் எண்ணெய், ஸிங்கர் ஊசிகள்,
ஸிங்கர் கத்தரிக்கோல் மற்றும ஸிங்கர் பாகங்களையே வாங்குங்கள்.

*ஸிங்கர் கம்பெனியின் ட்ரேட் மார்க்.

CHAITRA-SM-202 TAM





# சாட்சி நம்பர் 3

தமிழாக்கம்
ரா. வீழிநாதன்

விமல் மித்ர

## 9. கீழே தள்ளிய குதிரை

அடக்கமே உருவாக, அறியாத பிள்ளையாக, இரண்டு கைகளையும் கூப்பி வணங்கினான் நிசிகாந்தன். அப்புறம் நான் சொல்வதற்காகக் காத்திராமல் 'தம்'மென்று நாற்காலியில் உட்கார்ந்தான். சிறிது நேரத்துக்கு முன் மல்லிக் சாஹப் உட்கார்ந்திருந்த நாற்காலிதான் அது.

''எப்படி இருக்கிறீர்கள்?'' என்று கேட்டான் அவன்.

''நன்றாக இருக்கிறேன்; நல்லபடியாக இருக்கிறேன்!'' என்றேன் நான்.

''கேட்க மகிழ்ச்சியாக இருக்கிறது. 'நன்றாக இருக்கிறேன், நல்லபடியாக இருக்கிறேன்' என்ற சொல்லைக் கேட்டே யுகக் கணக்காகி விட்டது. உங்கள் பேச்சைக் கேட்டு எனக்கு உயிர் வந்தாற் போலிருக்கிறது. நல்லபடியாக ஒருவர் வாழவே முடியாது என்கிறாற் போலக் காலம் மாறிப் போய்விட்டது. அதுவும் எப்படி என்கிறீர்கள்? ஒருவனுக்காவது நிம்மதி கிடையாது; சுகம் கிடையாது. 'எப்படி இருக்கிறீர்கள்?' என்று யாரைக் கேட்டாலும், 'ஏதோ இருக்கிறேன். எப்படியோ பொழுது போய்க் கொண்டிருக்கிறது. காலம் ஓடிக் கொண்டிருக்கிறது' என்ற ஒரே பதிலைத்தான் சொல்லுகிறான். ஓர் எழுத்து அப்படி இப்படி மாறுகிறதில்லை. அதை மாற்றிச் சொன்னீர்களே நீங்கள்! அதற்காகவாவது உங்களைப் பாராட்ட வேண்டும்!'' என்றான் நிசிகாந்தன்.

இதற்கு நான் என்ன பதிலைச் சொல்வேன், பேசாமல் இருப்பதைத் தவிர?

நிசிகாந்தன்தான் பேச்சைத் தொடர்ந்தான்: ''ஒரு மனிதன் இந்தக் காலத்திலே எப்படி சார் நல்லபடியாக வாழ முடியும்? நீங்களே சொல்லுங்கள்! கிலோ நாலரை ரூபாய்க்கு எத்தனை பேராலே அரிசி வாங்கிச் சாப்பிட முடியும்? முன்பெல்லாம் அரையணாவுக்கு ஒரு முழுக் கோப்பை அருமையான தேநீர் கிடைத்து வந்தது. நீங்களும் கூடச் சாப்பிட்டிருப்பீர்கள்! இப்பொழுது இருபத்தைந்து காசுக்குக் குறைவாக எங்கே கிடைக்கிறது? அதுவும் அத்தனை தரமாகவா? — கேட்டால் தேநீர்க் கடைக்காரர்கள் மூக்கால் அழுகிறார்கள். 'சர்க்கரை கிலோ அஞ்சு ரூபா விற்கிறது. போட்டுக் கட்டுபடியாகுமா?' என்கிறார்கள். விலைதான் கூடிப் போயிற்றே என்று எந்தப் பொருளை நம்மால் விலக்க முடிகிறது? அரிசி, பருப்பு, எண்ணெய், உப்பு, காய்கறி எதுவுமே கிடைக்கிறதில்லை. கிடைத்தாலும் அவை விற்கிற விலையில் வாங்கிச் சாப்பிட முடிகிறதில்லை. உப்புப் பெருத விஷயம், இந்த உப்பையே எடுத்துக் கொள்ளுவோமே! ஒருநாள் ஹோட்டலில் சாப்பிடுகிற பொழுது கொஞ்சம் உப்புக் கேட்டேன். ஹோட்டல்காரன் உப்பு இல்லை என்றான். எனக்குக் கோபம் வந்து விட்டது. 'உப்பு இல்லையா? என்ன பேசுகிறாய் நீ?' என்று இரைந்தேன்.

''உப்பு என்ன விலை விற்கிறது, தெரியுமா? கிலோ ஒரு ரூபாய். அதனாலே எக்ஸ்ட்ரா உப்பு வேணுமானால் எக்ஸ்ட்ரா காசு கொடுக்கணும். தெரிந்து கொள்ளுங்கள். யானை விலை குதிரை விலையாக உப்பு விற்கிற நேரத்திலே எக்ஸ்ட்ரா உப்பு ஒரு கேடா?'' என்று திமிராகக் கேட்டான் ஹோட்டல்காரன்.

''உப்புக்குத் தனியாகக் காசு கொடுக்கணுமா? வேடிக்கையா பண்ணுகிறாய் நீ?'' என்று கேட்டேன். பேச்சுத் தடிக்கவே, ஹோட்டல் சிப்பந்திகள் அத்தனை பேரும், கையை ஓங்கிக் கொண்டு அடிக்க வந்து விட்டார்கள். நான் வெலவெலத்துப் போய் விட்டேன். அப்படியும் பாருங்கள், சார்! அவன் என் முகத்திலே ஓங்கி ஒரு குத்து விட்டு விட்டான், எனக்குக் கதிகலங்கிப் போய் விட்டது. ''தின்கிறது கடன் சோறு! அதற்கு மேலே பேச்சு வேறு! என்ன திமிர்!'' என்று சாடினான். என்னாலே அவன் விட்ட குத்தைத் தாங்க முடியவில்லை. அப்படியே கீழே விழுந்து விட்டேன்!''

நிசிகாந்தன் தன் பேச்சை நம்பும்படியாகத்தான் சொல்லிக் கொண்டிருந்தான். ஆனால் எனக்குத்தான் அவன் பேச்சிலே துளிக்கூட நம்பிக்கை பிறக்கவில்லை.

இதைக் கூறி முடித்துவிட்டு நிசிகாந்தன் சிறிது நேரம் என்னையே மௌனமாகப் பார்த்துக் கொண்டிருந்தான். பிறகு, ''என் பேச்சிலே உங்களுக்கு நம்பிக்கை ஏற்படவில்லை, இல்லையா?'' என்று கேட்டான்.

''இந்த நிகழ்ச்சி எப்பொழுது நடந்தது?'' என்று கேட்டேன் நான்.

''நேற்று சார், நேற்று! நேற்று மாலை நானே உங்களை நான் பார்த்தேன். அப்புறம் இரவு எட்டு மணி சுமாருக்குப் பயங்கரப் பசி எடுத்து விட்டது. மாலையிலே ஒரு கோப்பை நேநீர் குடித்திருந்தேன். இரண்டு மூன்று சிகரெட் புகைத்திருந்தேன். அவ்வளவுதான். அதனாலே வயிறு நிறைய அரிசிச் சோறு இன்போமே என்று ஹோட்டலுக்குப் போனேன். அப்பொழுதுதான் இந்தச் சம்பவம் நடந்தது. பாருங்கள், என் முகத்தை! எப்படிக் கரு ரத்தம் கட்டியிருக்கிறது. பார்த்தீர்களா?'' என்று கூறித் தன் முகத்தை என் பக்கமாக நீட்டினான்.

நான் வெகு நேரம் அவன் முகத்தையே பார்த்துக் கொண்டிருந்தேன். பல நாட்களாகக் குறுந்தாடி வளர்ந்து வரும் அவன் முகத்தில் கரு ரத்தம் கட்டியதை எப்படிப் பார்க்க முடியும்?

''பார்த்தீர்கள் அல்லவா?'' நிசொந்தன் தன் உளறலைத் தொடர்ந்தான். ''இந்தக் காலத்து மக்களே மாறிப் போய் விட்டார்கள். இன்றைய உலகம் என்று இதைத்தான் கூறுகிறார்கள். இந்த உலகத்தில் யாரும் யாருக்கும்சொந்தமில்லை. யாரும் யாருக்கும் வேண்டியவர் இல்லை.எவ னைக் கட்டிய மனைவியே கவனிக்கிறதில்லையோ, அவனுக்கு வாழ்க்கை என்ன, உலகம் என்ன? எல்லாமே ஒன்றுதான். நான் சொல்கிறது புரிகிறதல்லவா உங்களுக்கு? புரியவில்லை என்றால் நான் உங்களுக்கு ஒன்று சொல்லி வைக்கிறேன். அவசியம் ஏற்பட்டால், நீங்கள் உங்கள் நாவலில் எழுதக்கூட எழுதலாம்!''

''எதை?'' என்று கேட்டேன் நான்.

''எல்லாமே ஒரு நாள் உருத் தெரியாமல் அழிந்தொழியப் போகிறது. நான், நீங்கள், சரயு, மல்லிச் சாஹுப் யாருமே மிகுந்திருக்க மாட்டோம். நான் சொல்வதைக் குறிப்பெடுத்து வைத்துக் கொள்ளுங்கள்...''

''நானுமே அழிந்தொழியப் போகிறேன் என்கிறாயே, அந்த நிலையில் குறிப்பெடுத்து வைத்துக் கொள்வானேன்?''

என் நகைச்சுவையை அவன் புரிந்து கொள்ளவில்லையோ, அல்லது புரிந்து கொண்டுதான் தவிர்த்தானோ, தொடர்ந்து கூறினான்: ''நான் கூறுவதை முடி போட்டு வைத்துக் கொள்ளுங்கள். வரப் போகிற உலகத்திலே பணக்காரன், ஏழை, பெரியவன் — சிறியவன் யாருமே எஞ்சியிருக்க மாட்டார்கள். ஒரு வேளை என் பேச்சில் உங்களுக்கு நம்பிக்கை ஏற்படவில்லையோ என்னவோ? ஏழை சொல் அம்பலமேறுது என்ற வரக்குப் பொய்யாகுமா? என்றாலும் நான் கூறுவது நடைபெறப் போகிறது. நீங்களும் பார்க்கப் போகிறீர்கள்!''

அடேயப்பா! பணம் கேட்பதற்கு முன்னால் நிசொந்தன் தான் எத்தனை பெரியபீடிகைபோடுகிறான்? — அவன் பேச்சில் அதிகக் கவனம் செலுத்தாமல், இத்தனை நேரமும் நான் இப்படித்தான் எண்ணமிட்டுக் கொண்டிருந்தேன். பார்க்கப்போனால், பணம் கேட்பதற்காகத் தானே அவன் வந்திருந்தான்! எனவே, என் சிந்தனை அப்படி ஓடியதில் என்ன தவறு?



"நீங்கள் தேநீர் அருந்தி விட்டீர்களா?" திடீரென்று நிசிகாந்தன் பேச்சை மாற்றி இப்படி ஒரு கேள்வியைப் போட்டான். அதே நேரத்தில் அவன் பார்வை மேஜையின் மேல் இருந்த வெற்றுக் கோப்பையின் மீது விழுந்தது. மல்லிக் சாஹப் தேநீர் அருந்தி வைத்த கோப்பை அது. நான் தேநீர் அருந்தியிருப்பதாக நினைத்து, "நீங்கள் ஏற்கெனவே தேநீர் அருந்திவிட்டீர்கள் போலிருக்கிறதே!" என்றான்.

"ஆமாம்."

"அப்படியென்றால் நான் கொஞ்சம் முன்னாடி வந்திருக்க வேண்டும். ஆனால் எத்தனையோ பேர் காலையில் இரண்டு தடவை தேநீர் அருந்துகிறார்களே!" என்று முடித்தான்.

"தேநீர் கொண்டு வரச் சொல்லட்டுமா?" என்று அவனைக் கேட்டேன்.

"வேண்டாம் சார்! சர்க்கரை விலை ரொம்ப அதிகமாகி விட்டது. தேநீரைக் குறைத்துக் கொள்வதுதான் நல்லது. என்றாலும்...."

ஏதோ சொல்ல வந்தவன் சங்கோசத்தினால் சொல்லத் தயங்கினான் என்பது அவன் திக்கித் திணறியதிலிருந்து தெரிந்தது.



"என்ன சொல்ல வந்தாய்? சங்கோசப் படாதே. சொல்லு!" என்று ஊக்கினேன்.

"உங்களிடம் சொல்லச் சங்கோசம் என்ன சார்? உங்களுக்குத்தான் என் விஷயமெல்லாமே தெரியும். உங்களிடம் ஒளிப்பானேன்? என் மனைவி ஓடிப்போய் விட்டாள் என்கிறது ஊர் அறிந்த ரகசியம். நான் வெட்கம்—மானம், சூடு—சொரணை எல்லாம் விட்டவன். தலைக்கு மேலே தண்ணீர் சாண் போனால் என்ன, முழம் போனால் என்ன என்ற நிலைக்கு வந்தவன். நான் எதற்கு சார் சங்கோசப் படப் போகிறேன்?" என்று கேட்டான் நிசிகாந்தன்.

"இப்படி நீட்டி முழக்கத் தேவையில்லை. சொல்ல வந்ததை நேரடியாகச் சொல்லு: சுற்றி வளைக்காமல் சொல்லு!" என்றேன் நான்.

"நீங்களே வற்புறுத்திக் கேட்கிறபோது சொல்ல எனக்கு என்ன சார், தயக்கம்? காலை வேளையில் நான் இரண்டு கோப்பை தேநீர் அருந்துவது வழக்கம். படுக்கையை விட்டு எழுந்ததும் ஒரு முறை: அப்புறம் இந்த நேரத்துக்கு இன்னொரு முறை..."

நான் காளுவியைக் கூப்பிட்டுத் தேநீர் தயாரிக்கச் சொன்னேன்.

"தேநீர் வருவதற்கு முன்னால் தங்களிடம் இன்னொரு விஷயம் சொல்லலாமா?" நிசிகாந்தன் வினயமாகக் கேட்டான்.

"சொல்லு!"

"என் ரூபாய் ரெடியாக வைத்திருக்கிறீர்கள் அல்லவா?" நேரிடையாகவே கேட்டான் நிசிகாந்தன்.

நிசிகாந்தன் எப்பொழுதுமே இந்த முறையில்தான் பேசுவானாக இருக்கும் என்று பட்டது. ஏனென்றால், அவனுக்குப் பேச்சு ஒரு காரியம்; காரியம் ஒரு பேச்சு. இரண்டையும் விட்டால் வேறு எதுவும் வேலையில்லை என்றும் தோன்றியது.

"நான் உனக்கு ரூபாய் தரப் போவதில்லை, நிசிகாந்த்! இதை உனக்குத் தெளிவாகச் சொல்லிவிட விரும்புகிறேன்!" என்றேன்.

"தரப்போவதில்லையா?"

தலையிலே பேரிடி விழுந்தாற் போலிருந்தது நிசிகாந்தனுக்கு. அவனுக்கு என் பேச்சில் நம்பிக்கையே ஏற்படவில்லை. "பணம் தரமாட்டீர்களா?" என்று கேட்டான்.

"ஆமாம், தரமாட்டேன்!"

"ஏன்? நேற்றுப் பணம் தருவதாகச் சொன்னீர்களே!" என்று கேட்டான் நிசிகாந்தன்.

"நீ பொய் சொல்லுகிறாய், நிசிகாந்த்! நான் உனக்குப் பணம் தருவதாக ஒருபொழுதும் சொன்னதில்லை!"

"ஆனால் உங்கள் பேச்சை நம்பித்தானே நான் ஹோட்டல்காரனுக்கும் தேநீர் விடுதிக்காரனுக்கும் கணக்கைத் தீர்த்து விடுவதாகச் சொல்லி வந்திருக்கிறேன்!"

"நீ அப்படி ஏன் சொன்னாய்? அதற்கு நான் பொறுப்பு இல்லை!"

"நீங்கள் பொறுப்பு இல்லையென்றால், நானா பொறுப்பாளி?" என்று கேட்டான் நிசிகாந்தன்.

"ஆமாம், நீதான் பொறுப்பாளி!"

"என்ன சார் இது? குதிரை கீழே தள்ளியதும் அல்லாமல் குழியும் பறித்ததாம் என்ற கதையாக என்னையே வாரி விடுகிறீர்களே! நான் எல்லோரிடமும் சொல்லி விட்டேன். சொன்ன சொல்லைக் காப்பாற்று விட்டால், எல்லோரும் 'மொல்லு மொல்லு' என்று சண்டைக்கு வந்து விட மாட்டார்களா? வாயில் வந்தபடி திட்டித் தீர்க்க மாட்டார்களா?" என்று கேட்டான் நிசிகாந்தன்.

"உன் காரியம், நீதான் சமாளித்துக் கொள்ள வேண்டும். அதைப் பற்றி எனக்கு என்ன வந்து விட்டது? மகனே, உன் சமர்த்து!" என்றேன்.

நிசிகாந்தனின் இரு கண்களும் குளம் கட்டின. அவன் வருத்தம் தோய்ந்த குரலில்,



## சுபிட்சம் பெருக மகாயக்ஞம்

நாட்டில் சுபிட்சம் பெருக சென்னை வினஸ் காலனி ஆஸ்திக சமாஜத்தில் மே மாதம் 5-ந் தேதியிலிருந்து 8-ந் தேதி முடிய ஸ்ரீலக்ஷ்மீ நாராயண மகா யக்ஞம் நடைபெறவிருக்கிறது. தமிழ்நாட்டிலுள்ள வேதோத்தமர்கள் பலரும் பங்கு கொண்டு நடத்தும் இந்த மகாயக்ஞத்துக்கு ரூபாய் 50,000 வரை செலவாகும் என்று எதிர்பார்க்கப்படுகிறது. ஸ்ரீலக்ஷ்மீநாராயண மகா யக்ஞம் முக்கூர் ஸ்ரீ உ.வே. லக்ஷ்மி நரசிம்மாச்சாரியார் அவர்கள் மேற்பார்வையில் 32,000 தடவை புருஷ சூக்தம், 32,000 தடவை ஸ்ரீசூக்தம் ஜபதபங்களுடன் விமரிசையாக நடக்கவிருக்கிறது. இந்த மகா யக்ஞத்துக்குப் பக்தர்கள் தங்களாலான நிதி உதவியும், அரிசி, பருப்பு முதலிய பொருள்கள் உதவியும் பகவத் கைங்கரியத்தில் ஈடுபடலாம். நிதி, பொருள்கள் உதவ விரும்புவோர் காரியதரிசி, ஆஸ்திகசமாஜம், வினஸ் காலனி, சென்னை-18 என்ற விலாசத்துக்கு அனுப்பி வைக்கலாம்.

''ஏன் சார், நீங்கள் பணம் தர மாட்டீர்களா?'' என்று தீனமாகக் கேட்டான்.

''மாட்டேன்!'' அழுத்தமான குரலில் கூறினேன் நான்.

நிசிகாந்தன் துணுக்குற்றுத் திகைத்தான். ''நிசமாகவேதான் சொல்கிறீர்களா? தர மாட்டீர்களா?'' என்று கேட்டான்.

''நிஜமாகத்தான் கூறுகிறேன். நீ என்னதான் கஜகர்ணம் போட்டாலும் நான் உனக்கு ரூபாய் தரப் போவதில்லை.''

நிசிகாந்தன் சிறிது நேரம் என் முகத்தையே பார்த்துக் கொண்டிருந்தான். ''நீங்கள் ரூபாய் தராவிட்டால், நான் ரொம்ப ரொம்பச் சிரமப்பட்டுப் போய் விடுவேன், சார்!''

''சிரமப்பட்டுப் போய் விடுவாயா? ஏன்?''

''என்ன அப்படிக் கேட்டு விட்டீர்கள்? சிரமம் என்றால் சாதாரணச் சிரமமில்லை, சார்! மல்லிக் சாஹிப்பிடம் நான் என்ன சொல்லி விட்டு வந்திருக்கிறேன், தெரியுமா? எனக்கு நீங்கள் இருநூறு ரூபாய் கடன் தரப் போவதாகவும், அதிலிருந்து அவருடைய ஆறு மாத வாடகைப் பணம் நூற்றிருபது ரூபாயைத் தலையைச் சுற்றி விட்டெறிந்து விடப் போவதாகவும் சொல்லி வந்திருக்கிறேன். அப்புறம் பாக்கிப் பணத்தைக் கொண்டு ஹோட்டல்காரன், தேநீர்க் கடைக்காரன் — இரண்டு பேருடைய கடன்களையும் தீர்த்து விடுவதாகவும் கூறியிருக்கிறேன். பணம் கிடைக்கவில்லை என்றால், நான் சிரமப்பட்டுப் போய்விட மாட்டேனா, சார்?'' என்று தைன்யமாகக் கேட்டான் நிசிகாந்தன்.

''ஆமாம், அவர்களிடம் போய் நீ இப்படிப் போய் சொல்லுவானேன்? உனக்குப் பணம் தருவதாக நான் எங்கே கூறினேன்?''

''நீங்கள் கூறவில்லையா? எங்கே, நெஞ்சிலே கைவைத்துச் சொல்லுங்கள் பார்க்கலாம், நான் அப்படிச் சொல்லவில்லை என்று!''

''நான் சொன்னதே போதும். நெஞ்சிலே கைவைத்துச் சொல்ல வேண்டிய அவசியம் இல்லை!'' என்றேன்.

நிசிகாந்தனின் முகம் சூம்பிப் போய்விட்டது. நம்பிக்கை இழந்து என்னைப் பார்த்தான். அவன் விழிகளிலிருந்து பொலபொலவென்று கண்ணீர் சுரப்பதை நான் கண்டேன்.

''நான் ரொம்ப நம்பிக்கையோடு உங்களிடம் வந்தேன், சார்! நான் இப்பொழுது என்ன சார் செய்வேன்? எந்த முகத்தைக் கொண்டு வீட்டுக்குப் போவேன்? என்னத்தைச் சாப்பிடுவேன்? யார் யார் கிட்ட எப்படி ஒளிந்து திரிவேன்? எனக்கு ஒன்றுமே விளங்கவில்லையே?'' இடிந்து போய்க் கூறினான் நிசிகாந்தன்.

''இன்னும் வேறு எங்கேயாவது முயற்சி செய்து பாரேன்! இத்தனை பெரிய கல்கத்தாவிலே நான் ஒருவன்தானா உனக்கு அகப்பட்டேன்? என்னை விட்டாலும் உனக்கு எத்தனையோ பேர் கிடைப்பார்களே?'' என்றேன்.

அப்படியும் நிசிகாந்தன் விடவில்லை.

''சரி, சார்! நீங்கள் மல்லிக் சாஹப்புக்குக் கொடுக்க வேண்டிய வீட்டு வாடகையை மட்டும் கொடுங்கள். செருப்பால் அடிக்கிறாற் போல அந்தக் கிழவன் முகத்திலே அதை விசிறி அடித்து விட்டு வருகிறேன். கிழவன் போக்கிரிகளிலே முதல் நம்பர், சார்! இத்தனை மாதங்களாக என்னை என்ன பாடுபடுத்தி விட்டான், தெரியுமா? நட்சத்திரையனைக் கிட்டி கட்டி நெரிக்காத குறைதான்!'' என்றான் நிசிகாந்தன்.

''நான்தான் உனக்கு ஒரு செல்லாக் காசு கொடுக்கத் தயாரில்லை என்று சொல்லி விட்டேனே! அப்புறம் நீ என்னை எதற்கு நட்சத்திரையனுக்கும் மேலாக இப்படிக் கிட்டி கட்டி நெரிக்கிறாய்!'' என்று கடிந்தேன்.

''உங்களுக்கும் வேண்டாம், எனக்கும் வேண்டாம். நூறு ரூபாய் கொடுங்கள், போதும். நான் சமாளித்துக் கொள்கிறேன். என் பேச்சுப் பிழைத்துப் போகட்டும், சார்!'' என்றான் நிசிகாந்தன்.

எனக்கு அவன் மேல் ஆத்திரம் வந்தது. ''என்னைத் தொந்தரவு படுத்தாதே! நான் உனக்கு ஒன்றும் தரப்போவதில்லை. இது உறுதி! மனைவியை வாடகைக்கு விட்டுத் தொழில் நடத்திப் பணம் சம்பாதிக்கிற உனக்குப் பணம் கொடுக்கணுமோ? தயவு தாட்சிண்யம் பார்க்காமல் உன்னைச் சிறைக்கு அனுப்பணும், தெரிந்ததா?'' என்று பொரிந்து தள்ளி விட்டேன்.

''என்ன சொன்னீர்கள்?'' நிசிகாந்தனின் குரலில் கடுமை வெடித்தது. (தொடரும்)



எனக்குத் திருமணம் நிச்சயம் ஆகி விருந்த சமயம். வரப்போகும் கணவருடைய பெயர் என்ன என்று கேட்டார்கள். எனது இஷ்ட தெய்வத்துடன் நான் சேர்ந்தால் அதுதான் என் கணவர் பெயர் என்று சொன்னேன். எனது இஷ்ட தெய்வம் ராமன் என்பது அவர்களுக்குத் தெரியும். இருந்தும் அவர்களால் அந்தப் பெயரைக் கண்டு பிடிக்க முடியவில்லை. உங்களால் முடிகிறதா என்று பாருங்கள்.

விடை: 'நான்' என்பதற்கு ஆங்கிலச் சொல் ' I ' 'Raman' உடன் ' I ' சேர்ந்தால் 'Ramani' என் கணவரின் பெயரும் ரமணிதான்.

- பிரேமா ரமணி

# தாய்மைப் பூரிப்பு!



தாய்மைப் பூரிப்புடன் சிரித்து மகிழும் இந்தப் பெண் யார் தெரிகிறதோ? சாட்சாத் அமெரிக்க ஜனாதிபதி கார்ட்டரின் மாட்டுப் பெண்தான்! காராவுக்கும் அவள் கணவர் சிப் கார்ட்டருக்கும் பிள்ளைக் குழந்தை பிறந்தது. கார்ட்டர் இரண்டாவது முறையாகத் தாத்தாவாகி யிருக்கிறார்.

சிப் கார்ட்டர் நமது ராஷ்டிரபதி காலமான போது தமது அப்பாவின் சார்பில் நம் தேசத்துக்கு வந்து நமக்கு அனுதாபம் தெரிவித்து விட்டுப் போனது நினைவிருக்கும்.

# அமெரிக்கா மாமியார்

அமெரிக்காவில் என் கணவருடனும் கைக் குழந்தையுடனும் குடித்தனம் நடத்த ஆரம்பித்த போது வீட்டு வேலைகளைச் செய்து முடிக்க மிகவும் கஷ்டப்பட்டேன். அதனால் அவரிடம் கெஞ்சிக் கூத்தாடி எப்படியோ வேலைக்காரி வைத்துக் கொள்ள அனுமதி வாங்கி விட்டேன். ஏஜன்ஸி ஒன்றுக்கு போன் செய்து, அனுபவம் பெற்ற ஓர் அம்மாளை அனுப்பச் சொன்னேன். (வீடு பார்த்துக் கொடுக்கும் ஏஜென்ஸிகளைப் போல், வேலைக்கு ஆள் அமர்த்திக் கொடுக்கும் ஏஜன்ஸிகள் அமெரிக்காவில் உண்டு.) அவர்களும் மத்தியானம் ஒரு மணிக்கு ஓர் அம்மாளை அனுப்புவதாகக் கூறினார்கள். மேலும் கேள்விகள் கேட்டுப் பிடித்திருந்தால் வைத்துக் கொள்ளலாம் என்றும் கூறினார்கள். அன்று காலை முழுதும் அவளைக் கேட்க வேண்டிய கேள்விகளை மனப்பாடம் செய்து கொண்டேன்.

மத்தியானம் இரண்டு மணிக்குத்தான் அந்த அம்மாள் வந்தாள். வயது நாற்பது இருக்கலாம். நான் அவளைப் பார்த்து முறுவலித்து, உள்ளே வரச் சொன்னேன். உள்ளே நுழைந்தவுடன், சுற்று முற்றும் பார்த்துவிட்டுப் ''பழங்கால வீடுதான்''

# அல்லி ராஜ்யம்!

வருடா வருடம் ஜனவரி முதல் தேதி தொடங்கி நாற்பத்தைந்து நாட்கள் இங்கு நடக்கும் பெரிய கண்காட்சியில் குறிப்பிட்ட தினங்களில் பெண்கள் மட்டுமே உள்ளே செல்ல அனுமதிக்கப்படுவார்கள். மற்றவர்கள் மூச்! ஐந்து வயதுக்குட்பட்ட சிறுவர்கள் மட்டும் பெண் துணையுடன் உள்ளே செல்லலாம். ஸ்டால்களில் வியாபாரத்தைக் கவனித்துக்கொள்ளும் ஆடவர் தொகை அந்த நாட்களில் பாதியாகக் குறைக்கப்படும். அவர்களும் பகல் மூன்று மணிக்கு முன்பே தங்கள் ஸ்டால்களுக்குள் சென்றுவிடவேண்டும். அதன் பின் ஸ்டாலை விட்டுக் கண்டிப்பாக வெளியே வரக் கூடாது. இரவு பத்து மணிக்கு மேல் வாலண்டியர் வந்து ஒவ்வொருவராகக் 'கேட்'டுக்கு வெளியே கொண்டு விடுவார். அநாவசியமாக ஓர் ஆண் அங்கு இருக்க முடியாது. மொத்தத்தில் எங்கும் பெண்கள், பெண்கள், பெண்கள்தான். அவர்கள் வைத்ததுதான் சட்டம்.

அன்றைய தினங்களில் பரந்து கிடக்கும் இந்தக் கண்காட்சியின் எல்லைப்புறத்தில் - உள்ளே இருப்பவர்கள் தெரியாமல் இருக்க - முழுவதும் தட்டி வைத்து அடைத்து விடுகிறார்கள்.

சந்திரா நாராயணன், ஹைதராபாத்







என்று முணுமுணுத்துக் கொண்டே சோபாவில் அமர்ந்தாள்.

''நீங்கள்தான் ஏஜென்ஸிக்குப் போன் பண்ணியவர்களா?'' என்றாள். ''ஆமாம்'' என்றேன். ''இதற்கு முன் வேலைக்கு ஆள் வைத்துக் கொண்டு பழக்கம் உண்டா?'' என்று கேட்டாள். ''இல்லை'' என்ற பதில் அவளுக்குத் திருப்தி அளிக்கவில்லை என்பது அவள் முக பாவத்திலிருந்து தெரிந்தது.

''உங்கள் வீட்டில் துணி துவைக்கும் மெஷின், பாத்திரம் கழுவும் மெஷின், வீடு பெருக்கும் மெஷின் எல்லாம் உண்டா?'' என்று கேட்டாள் அவள். ''உண்டு'' என்றேன் நான்.

''குழந்தைத் இருக்கிறதாக்கும்?'' என்று வினவியவள், என் பதிலைக் கேட்டு, ''குழந்தைக்கு வேண்டியவற்றை நீங்கள்தான் செய்து கொள்ள வேண்டும்'' என்றாள். நானும் ''சரி'' என்றேன். ''காலையில் இரண்டு முறை காப்பி குடிக்கும் பழக்கம் உண்டா?'' என்றாள். நான் பயந்து கொண்டே ''உண்டு'' என்று தலையாட்டினேன். ''ஒரு முறைதான் நான் கலப்பேன். அதற்கு மேல் வேண்டுமானால் நீங்கள்தான் போட்டுக் கொள்ள வேண்டும்'' என்றாள். ''சரி'' என்றேன்.

''வாரத்தில் ஏழு நாட்கள் என்னால் வேலை செய்ய முடியாது. மத்தியானம் சிறிது நேரம் தூங்க வேண்டும்'' என்று தன் நிபந்தனைகளை யெல்லாம் கூறினாள்.

அவள் கேட்ட கேள்விகளுக்கு ஒழுங்காகப் பதில் கூறியதால் அவளுக்கு என்னைப் பிடித்துப் போய் விட்டது போலும். ''சரி, நாளையிலிருந்து வேலைக்கு வருகிறேன்'' என்று சொல்லி விட்டுச் சென்றாள்.

வேலைக்காரி தேடிக் கொடுக்கும் நிறுவனம் 'கேள்விகள் கேட்டுப் பிடித்திருந்தால் வைத்துக்கொள்ளலாம்' என்று கூறியது எனக்கு இல்லை, அவர்கள் அனுப்பும் வேலைக்காரிக்குத்தான் என்று எனக்குப் பிற்பாடு புரிந்து என்ன செய்ய?

—கௌரி பிரியா








தக்காளி 1 கிலோ (நன்றாகப் பழுத்த பழம்) புளி 200 கிராம்; மிளகாய் 150 கிராம்; நல்லெண்ணெய் அரை கிலோ; பெருங்காயம் பெரிய துண்டு ஒன்று; கடுகு 150 கிராம்; உப்பு 200 கிராம்; வெந்தயம் 2 டீ ஸ்பூன்.

செய்முறை: தக்காளிப் பழங்களை முதல் நாள் இரவு நன்றாகக் கழுவிச் சிறு துண்டங்களாக நறுக்கிக் கொண்டு ஒரு பாத்திரத்தில் போட்டு மூடி வைக்க வேண்டும். மறு நாள் காலை தக்காளிப் பழங்களின் துண்டுகளை ஒரு தட்டில் போட்டு வெய்யிலில் நன்றாகக் காய வைக்க வேண்டும். அதன் ரசத்தில் புளியை ஊறவைக்க வேண்டும். நன்றாக ஊறிய பிறகு கல்லுரலில் போட்டு நன்றாக அரைத்து எடுத்து வைத்துக் கொள்ளவும். மிளகாயையும் கடுகையும் நன்றாகப் பொடி செய்து கொள்ளவும். பெருங்காயத்தையும் வெந்தயத்தையும் வறுத்து எடுத்துப் பொடி செய்து கொள்ளவும். நல்லெண்ணெயை அடுப்பில் வைத்து நன்றாகக் காய்ச்சி ஆறவைக்க வேண்டும்.

பாத்திரத்தில் அரைத்து வைத்துள்ளதில் பொடி செய்த மிளகாய், கடுகு, பெருங்காயம், வெந்தயப் பொடிகளையும் உப்பையும், காயவைத்துள்ள தக்காளி பழத் துண்டுகளையும் ஆறிய நல்லெண்ணெயை விட்டு நன்றாகக் கிளறி விடவும். பிறகு ஒரு ஜாடியில் எடுத்து வைக்க வேண்டும். இந்த ஊறுகாய் எத்தனை நாளானாலும் கெடாது.

-ஆர். சித்ரா

பால் பாயிண்ட் பேனா எழுதா விட்டால் பாலிதீன் பேப்பர் மீது அழுத்தி எழுதுங்கள். பின்னர் சாதாரணப் பேப்பரிலும் நன்றாக எழுதும்.

-கோ. செயந்தராம

## குழந்தை வளர்ப்பு!

காய்கறிகளை உடலைப் புஷ்டியாக்கக் குழந்தை பிறந்த நாலாவது, ஆறாவது மாதத்திலிருந்து கொடுக்கலாம். காய்கறிகளை வேக வைத்து, அதனை 'சூப்' போல் ஆக்கி ருசிக்காக ஒரு சிறிது உப்பிட்டு ஆரம்பத்தில் ஒரு டீஸ்பூன் தரலாம்.

- டாக்டர் பி. லக்ஷ்மி



# சேரமான் காதலி

அத்தியாயம் 23

## பூஜியாரை விடைபெறுகிறாள்

அன்று மாலை நம்பூதிரிகள் சபையில் பயங்கர மௌனம்குடிகொண்டிருந்தது.

சேரமான் மதம் மாறுவதில் நாராயண நம்பூதிரியை விட, அதிக ஆத்திர முற்றிருந்தவன் சிர்வல்லபனே.

'எதைத் தடுக்க வேண்டும் என்று நினைத்தோமோ, அது இரண்டு மடங்காகி விட்டதே' என்பதே அவன் ஆத்திரத்துக்குக் காரணம்.

பாண்டிய நாட்டில் சைவத்தை ஜீரணித்துக் கொண்டு சமணம் வளர்ந்த போது, அந்தச் சமணத்தைக் கருவறுத்தது பாண்டிய வம்சம்.

ஆனல் சேர நாட்டிலோ சமய பூர்வமாக, இஸ்லாம், சமுதாயத்திலோ, அரசியலிலோ குறுக்கிடவில்லை. மன்னன் தானாகவே மேற்கொண்டுவிட்ட ஒரு காதல் — அந்த மார்க்கத்தின் கட்டுப்பாடு காரணமாக ஒரு மத மாற்றம்.

இதில் இஸ்லாத்தை நொந்துகொள்வதற்கு என்ன காரணம் இருக்கிறது?

ஆனல் ஒரு சைவன் தன் சமயத்தின் மானம் மரியாதைகளை சுடு வைத்து விட்டானே!

உலகம் தழுவிய உன்னத சமயத்தைத் தனது சிறிய ஆசைகளுக்காகப் பலி கொடுத்து விட்டானே!

ஒரு கற்பூரம் எரிந்து அடங்க, அடுத்த கற்பூரம் ஏற்றப்படுவது போல், வளர்வதும் அழிவதுமே இந்து சமயத்தின் தலையெழுத்தா?

நம்பி ஆரூராரோடு கைலை சென்ற சைவர் முதலாம் சேரமான் பெருமாள் எங்கே, வைணவம் வளர்த்து ஆள்வாரான இரண்டாம் சேரமான் பெருமாள் என்ற குலசேகர ஆள்வார் எங்கே, இளம் பருவத்திலேயே மூன்றும் திருவிசைபாப் பாடி வேணாட்டு அடிகள் என்று பட்டம் பெற்ற மார்த்தாண்ட வர்மன் எங்கே!

இந்து சமயத்தின் காவல் தூண்களாக விளங்கிய சேரர் பரம்பரையில் இஸ்லாம் மார்க்கத்தைத் தழுவப்போகும் மூன்றும் சேரமான் எங்கே!

''எக்களங்கம் போனலும் இக்களங்கம் போகாதே, தென்மதுரைச் சொக்கலிங்கம்'' என்று தலையில் அடித்துக் கொண்டான் சிர்வல்லபன்.

சபை உறுப்பினர்களான நம்பூதிரிகள் ஒரு மரண வீட்டில் அமர்ந்திருப்பது போல் அமர்ந்திருந்தார்கள்.

முன்பு சிர்வல்லபனுக்குப் பின்னல் வந்த கொங்கு நாட்டுத் தளபதியும் அமர்ந்திருந்தார்.

நாராயண நம்பூதிரி ஏதும் பேசாமல் குறுக்கும் நெடுக்குமாக நடந்து கொண்டிருந்தார்.

அப்போது இரண்டு வீரர்கள் செய்தி கொண்டு வந்தார்கள்.

பாண்டியப் படை கடல் துறைப் பட்டினமான விழிஞத்துக்கு வந்து விட்டதாகவும், சேரமானின் படைகள் அங்கே தோற்கடிக்கப்படுவது உறுதி என்றும் அவர்கள் கொண்டு வந்த செய்திகள் கூறின.

அந்தச் செய்தியில் சிர்வல்லபனே நம்பூதிரியோ அதிக அக்கறை காட்டவில்லை.

எதிரி வாளைக் கிழே போட்டுவிட்டு வேறொரு வேதப் புத்தகத்தைக் கையில் எடுத்துக் கொண்ட பிறகு, போரில் வெற்றி என்பது காத்திருந்து கேட்க வேண்டிய செய்தி அல்லவே!

அப்போதும் ஆவல் தாங்காமல், ''இன்னும் ஒரு முயற்சிக்கு ஏதேனும் வழி உண்டா?'' என்று கேட்டான் சிர்வல்லபன்.

''எல்லாக் கதவுகளும் அடைபட்டு விட்டன. அரபிக் கடலை நோக்கி இருக்கும் கதவு மட்டுமே திறந்திருக்கிறது. இனி அங்கிருந்து வருகிறவர்கள்தான் அவரோடு பேச முடியும்'' என்றார் நம்பூதிரி.

''நீங்கள் பத்மாவதியைச் சந்தித்தால்....?'' என்று கேட்டான் சிர்வல்லபன்.

''பாவம் பத்மாவதி! அவளும் மதம்மாறாமல் இருப்பதே பெரிய காரியம்'' என்றார்நம்பூதிரி.

கண்ணதாசன்

''பின் வழி?'' என்றான் சேர்வல்லபன்.

''ஆம்; பின்வழி! முன் வழிகளெல்லாம் மூடப்பட்ட பிறகு மூளையுள்ளவன் கண்ணில் தோன்றும் பின் வழி!'' என்றார் நம்பூதிரி.

அப்போது சேரமானின் அரண்மனையில் முன் வழிகளெல்லாம் மூடப்பட்டுத்தான் இருந்தன.

தன் சகோதரிகளோடும், பத்மாவதியோடும், மெல்லிளங் கோதையோடும் மிகுந்த உற்சாகத்தோடும் கலகலப்போடும் பேசினார் சேரமான்.

அனைவரையும் தமது பூஜை அறைக்கு அழைத்துச் சென்றார்.

அங்கு தங்கத்தால் செய்யப்பட்ட உமையொருபாகனைக் கைகூப்பி வணங்கினார்.

''எந்தையே! எம்பெருமானே! எங்கும் இருப்பவன் நீயே! எல்லா வடிவங்களும் உன் வடிவங்களே! அணிந்து கொண்டிருக்கிற சமயச் சின்னங்களால் மட்டுமே ஒருவன் அடையாளம் காணப்படுவதில்லை. எடுத்துக் கொண்ட காரியத்துக்கு விசுவாசமாக இருப்பவன் தன் செயல்களிலும் நன்றி யுடைமைகளிலுமே இறைவனைக் காண்கிறான். எம்பெருமானே! உன் நீண்ட சடையில் காணும் பிறை முடியைத்தான் இனி நான் நிரந்தரமாகக் காணப் போகிறேன். உன்னைப் பூஜிப்போருக்கு இந்த உண்மை தெரியா விட்டாலும் உனக்குத் தெரியும்'' என்று சிவபெருமானிடம் நேரில் பேசுவது போல் பேசினார்.

பிறகு பொக்கிஷ அறைக்குச் சென்றார். தம் வாழ்க்கைக்குத் தேவையானவற்றை மட்டும் எடுத்துக் கொண்டார். அவற்றை ஒரு சிறிய மரப் பெட்டியில் அடக்கம் செய்தார்.

சேரநாட்டு மணி மகுடத்தைக் கடைசியாக ஒரு முறை தலையில் வைத்துக் கழற்றினார்.

தம் ஐந்து சகோதரிகளையும் வரச் சொல்லி, அவர்கள் கையில் ஒரு தங்கத் தாம்பாளத்தைக் கொடுத்து அந்த மகுடத்தை அதில் வைத்தார். நவமணிகள் பதித்த செங்கோலை அதில் வைத்து. ''இனி கால காலங்களுக்கு என் சகோதரிகளின் குழந்தைகளுக்கே இது!'' என்றார்.

தம் ஐந்து சகோதரிகள், பத்மாவதி, மெல்லிளங்கோதை, தமக்கு மிகவும் விசுவாசமாக இருந்த மூன்று ஊழியர்கள் அனைவரையும் அமர வைத்தார்.

இதுகாறும் நாம் கதையிலே கொண்டு வராத மற்றொரு உறவினர் சேரமானுக்கு உண்டு. அது அவர் தம்பி. குலசேகர ஆள்வார் காலத்தில் பாண்டியரோடு விழிஞத்தில் நடந்த போரில் அவன் கொல்லப்பட்டான். அவனது மக்கள் கொல்லம் பகுதியை ஆண்டு வந்தார்கள். அவர்களையும் கணக்கில் எடுத்துச் சேர்நாட்டைத் தான் பன்னிரண்டு பகுதிகளாகப் பிரித்திருப்பதாகத் தம் சகோதரிகள் முன்னிலையில் சேரமான் அறிவித்தார்.

இவற்றுள் வேணாட்டோடு ஓட்ட நாட்டையும் இணைத்து மார்த்தாண்ட வர்மனுக்குத் தந்திருப்பதாகவும், மற்ற நாடுகளை மற்றப் பதின்மருக்கும் தந்திருப்பதாகவும் சேரமான் அறிவித்தார்.



(அதுமுதல்தான் சேரநாட்டில் 'மரு மக்கள் தாயம்' என்ற முறை ஆரம்ப மாயிற்று.)

இப்படி நாட்டைப் பிரிப்பதற்கோ, இணைப்பதற்கோ நம்பூதிரிகள் சபை யின் முன் அனுமதி தேவையில்லை என் றும், செய்யப்பட்ட ஏற்பாடுகளுக்கு ஒப்புதல் அளித்துச் சபை உறுப்பினர் ஒருவரை ஆங்காங்கு நியமிப்பது ஒன்றே சபைக்குள்ள அதிகாரம் என்றும் முன்பு வகுக்கப்பட்ட சேரநாட்டின் அரசு நியதி களைச் சேரமான் கட்டிக் காட்டினார்.

ஒவ்வொரு நாட்டுக்கான பட்டயங் களையும் அவர்கள் கையில் கொடுத்தார்.

மூன்று வேலைக்காரர்கள் தலையிலும் பட்டுத் துண்டு கட்டி, அவர்கள் தோளில் தட்டி, ''—நானே முதல் நீங்கள் மன்னர்கள்'' என்றார்.

தம் சகோதரியைப் பார்த்து, ''உன் கணவன் — இப்போது படையெடுத்து வரும் மானிச்சனும் ஒரு மன்னன் தான்!'' என்றார்.

அனைவரும் பார்த்திருக்கும்போதே, ''வாம்மா! வாம்மா!'' என்று பூஜி யானுவையும், சலீமாவையும் பக்கத்தில் அழைத்தபடி, பெண் குழந்தையைக் கையில் தூக்கிக் கொண்டு மேன் மாடத் துக்குச் சென்றார்.

அங்கே சென்றதும் செல்லாததுமாக அவர் காலில் விழுந்தாள் பூஜியானு. கதறி அழுதாள்.

''சுவாமி! . என்னால்தானே உங்க ளுக்கு இவ்வளவு துயரம்! அரசு துறந்து அரியணை துறந்து விடைபெற வேண் டிய அவலம் என்னால்தானே உங்களுக்கு நேர்ந்தது!'' என்று கதறினாள்.

''உன்னாலல்ல; பூஜியானு! என்னால். என்றைக்கு இந்த மண்ணில் நான் வந்து இறங்கினேனோ, அன்றைக்கே மன்ன வரின் துயர காலம் ஆரம்பமாகிவிட் டது!'' என்றாள் சலீமா.

''ம்! எழுந்திருங்கள். யாருடைய விதியை யார் நிர்ணயிக்க முடியும்? இது எல்லாம் வல்லவன் நிர்ணயித்தது. வாருங்கள்; இந்த மஞ்சத்தில் கடைசி யாக அமருங்கள். அரசியல் - சந்தடி களில் இருந்து ஒதுங்கி யிருப்பதுபோன்ற ஆனந்தம் வேறெதிலும் இல்லை. தனிமை தனிமை! தனிமை! உங்கள் இருவ ரோடும் இந்தக் குழந்தையோடும் அமை தியாகப் பொழுது போக்க இது நல்ல வாய்ப்பு!'' என்ற சேரமான், இருவரை யும் பக்கத்தில் படுக்க வைத்து, ''ஒரு முடிவுக்குத் தன்னைக் கட்டுப்படுத்திக் கொண்டவன், தானே முடிவுறுவதானு லும் அந்த முடிவைக் கைவிட முடி யாது'' என்றார்.

அப்பொழுதுதான் அவர் தேடிப் பார்த்தார்; அவர் கழுத்தில் அணிந் திருந்த பூஜியானு உருவம் பொறித் திருந்த பதக்கத்தைக் காணவில்லை. அதை அவர் பெரிதாகக் கருதவில்லை.

அவர் அமைதியாக உறங்கத் தொடங்கினார்.

நள்ளிரவில்....

அரண்மனை அந்தகாரத்தில் மூழ்கிக் கிடந்தது. அரண்மனையின் கீழ் மண்ட பத்தில் கறுப்புத் துணியால் தங்களை மறைத்துக் கொண்ட நான்கு உரு வங்கள், ஒரு விளக்கேற்றும் கம்பினால் சரவிளக்குகளை ஒவ்வொன்றாக அணைத் துக்கொண்டே வந்தன.





## புன்னகைப் பூக்கள்!

கோப்பை மலர்கள் பல்
 கோல எழில் என்றாலும்
கோமளத் தென்றல் வீசும்
 தோட்ட மலர்க்கு ஈடாமோ?
புன்னகைகள் பலவிதம்
 பூத்திடுதல் கண்டாலும்
அன்பினை வரவேற்க
 அலர்வதற்கு இணையாமோ?

மேலட்டை வண்ணப்படம் எடுத்தவர்:
வித்யாசங்கர்

அதைப் பார்த்து விட்டான் ஒரு காவலாளி.

அவனைக் கட்டிப் பிடித்துத் தூணில் கட்டி ஈட்டியை அவன் முன்னால் நீட்டியவாறே, ''சேரமான் எங்கே உறங்குகிறார்?'' என்று கேட்டது ஓர் உருவம்.

மாடத்தைக் கைகாட்டினான் அவன்.

உடனே அவன் வாயில் துணியை வைத்து அடைத்து விட்டு, நான்கு உருவங்களும் மாடத்துப் படிக்கட்டில் ஏறின.

சப்ரமஞ்சப் பள்ளியறையின் சாளரக் கதவு திறந்து கிடந்தது.

திரைச் சீலையை மெதுவாக விலக்கி, மங்கலான வெளிச்சத்தில் கூர்ந்து கவனித்தான் ஒருவன். தூரத்தில் மூன்று பேர் படுத்திருப்பதைக் கண்டான்.

'நடுவில் படுத்திருப்பதுதான் சேரமானாக இருக்க வேண்டும்' என்று முடிவு கட்டி, ஈட்டியைக் குறிபார்த்து வீசப் போனான்.

ஓரத்தில் படுத்திருந்த பூஜியானு ஏதோ சத்தம் கேட்டு எழுந்து உட்காருவதற்கும் அவன் ஈட்டியை வீசுவதற்கும் சரியாக இருந்தது.

ஈட்டி அவள் முதுகில் பாய்ந்து மார்பில் முகம் காட்டிற்று.

'' சுவாமி !'' என்று கதறினாள் பூஜியானு.

உருவங்கள் வெளியே ஓடின.

சேரமான் எழுந்து உட்கார்ந்தார்; பதறினார்; துடித்தார்.

பூஜியானுவின் முதுகில் ஈட்டி பாய்ந்திருப்பதைக் கண்டு அதைப் பிடுங்கி எடுத்தார். அவர் மடியில் விழுந்தாள் பூஜியானு.

''யார் அங்கே?'' என்று ஓங்கிக் கூச்சலிட்டார் சேரமான்.

''ஐயோ!'' என்று அலறினாள் சலீமா.

''சுவாமி! இது எனக்கு நல்ல முடிவு!'' என்ற பூஜியானுவின் உயிர் பிரிந்தது.

சேரமான் கதறி அழுதார்.

கீழே இருந்த அனைவரும் மேலே ஓடி வந்தார்கள்.

அவளை அப்படியே இரண்டு கைகளிலும் தூக்கியபடி, ''என் கண்ணே! என்னைப் பலி வாங்க வந்தவர்கள் உன்னைப் பலி வாங்கி விட்டார்களா? இரண்டு தீபங்களின் மத்தியில் நிற்க நினைத்த என்னை ஒரு தீபத்தின் ஒளியே உனக்குப் போதும் என்று சொல்வது போல், உன்னை எடுத்துக் கொண்டு பலி வாங்கி விட்டார்களா? பூஜியானு! இன்றிரவு நான் தூங்கியிருக்கக் கூடாது! தூங்கியிருக்கக் கூடாது!'' என்று அழுத சேரமான், ''நல்லது. உன் சடலத்தைக் கூட இந்த மண்ணில் விட்டு வைக்க மாட்டேன்!'' என்று அந்தச் சடலத்தோடு கீழே இறங்கினார்.

அனைவரும் பின்னால் இறங்கினார்கள்.

ஆடைகள் வைக்கும் ஒரு நீண்ட மரப் பெட்டியில் பட்டு விரித்து அவளது சடலத்தைக் கிடத்தினார்.

சகோதரிகளும், பத்மாவதியும் மெல்லிளங்கோதையும் அழுதார்கள்.

பாதுகாப்பு அற்றுப் போன அந்த அரண்மனை — மூன்றே காவலாளிகள் மட்டும் மிஞ்சிய அந்த அரண்மனை— ஆட்டம் முடிந்த அரங்கம் போல் பொலிவிழந்து கிடந்த அந்த அரண்மனை அவர்களைப் பரிகாசமாகப் பார்த்தது.

குடை நிழலிருந்து குஞ்சரம் ஊர்ந்தவன் நடை மெலிந்த நிலையைப் பார்த்தது.

கோபுரம் கீழே விழுந்தால் செங்கல் சிரிக்காதோ?

யானை குழியில் விழுந்தால் தவளை உதைக்காதோ?

ரத்தம் படிந்த தம் கைகளை நீட்டி, சலீமாவின் கைகளில் இருந்த பூஜியானுவின் குழந்தையை வாங்கினார் சேரமான்.

''உன் தாய் போய்விட்டாள்! உன் தாய் போய்விட்டாள்!'' என்று விம்மி விம்மி அழுதார்.

பிறகு ''அவள் எங்கே போனாள்? இதோ இருக்கிறாளே! இதோ பார் உன் தாய்!'' என்று அந்தக் குழந்தையைப் பத்மாவதியின் கையில் கொடுத்தார். (தொடரும்)

## காட்சி 1

[சாஸ்திரி நகரில் சிறிய வீடு. வீட்டுக்கு வெளியே அழகான வேலி கட்டிச் செடி கொடிகள் வைக்கப்பட்டிருக்கின்றன. காலை வேளை. சாமிநாதன் செடிகளுக்கெல்லாம் அக்கறையுடன் தண்ணீர் ஊற்றிவிட்டு உள்ளே போகிறார்.]

சாமிநாதன்: தங்கம்!

தங்கம்: என்ன?

சாமி: தக்காளி வைத்து விட்டேன். உனக்குத் திருப்திதானே?

தங்கம்: வெண்டைப் பாத்திக்குப் பக்கத்திலே தானே? கத்தரிக்குப் பக்கத்தில் இல்லையே?

சாமி: ஒரு தரம் அனுபவப்பட்டு வீணாகப் போய்விட்டதே, தெரியாதா? பாரேன், மளமளவென்று வரப்போகிறது. உனக்குத்தான்... (சட்டென்று பேச்சை மாற்றி) இதைப் பார்த்தாயா? புதுப் புத்தகம். லைப்ரரியிலிருந்து கொண்டு வந்தேன்.

(வழுவழுப்பான அட்டை கொண்ட அந்தப் புத்தகத்தை ஆசையுடன் பெற்றுக் கொள்கிறாள் தங்கம். மெல்லப் புரட்டிப் பார்க்கிறாள். அவள் முகம் மலர்கிறது.)

தங்கம்: எவ்வளவு அழகான ரோஜாப்பூ! அடடா!

சாமி: கவலைப்படாதே தங்கம். அந்த மாதிரி இங்கேயும் வைத்துவிடலாம்.

தங்கம்: ஆ... சொல்ல மறந்து விட்டேனே! ஒரு கடிதாக வந்தது.

சாமி: யாரு? (கேட்டுக் கொண்டே அலமாரியைத் திறக்கிறார்.) ஓ... சங்கரிடமிருந்தா! (பிரித்துப் படித்துக் கொண்டே) ம்... கல்கத்தாவுக்கு ட்ரான்ஸ்பர் ஆகிவிட்டதா? அடடே!

தங்கம்: எப்போ வராளும்?

சாமி: பத்துப் பதினைந்து நாட்களாகும். .ம்... அவன் வரபோது ரெண்டு தென்னை வாங்கி வரச் சொல்லணும். என்ன தங்கம், குட்டை ரகமா இல்லே, நெட்டையா?

தங்கம்: எதுவானாலும் குலை விடுவதற்கு அஞ்சாறு வருஷமாவது ஆகும்.

சாமி: இன்னிக்கே அவனுக்குப் பதில் எழுதிப் போட்டு விடறேன். (சட்டென்று ஏதோ ஞாபகம் வந்தவராக) ம்... அமெரிக்காவிலிருந்து ரமா கூட அந்தச் சமயத்தில்தானே வராள்? அவர்கள் ரெண்டு பேரும் வருவதற்குள் தோட்டம் இன்னும் பிரமாதமா ஆகணும்.

## காட்சி 2

(ஒரு வாரம் கழித்து)

தங்கம்: இந்தாருங்கள்! இங்கே வாருங்களேன்! (கணவனைக் கூப்பிடுகிறாள்).

சாமிநாதன்: என்ன தங்கம்?

தங்கம்: இப்பத்தான் கேள்விப்பட்டேன். மணி சொன்னான். பேப்பரிலேயும் பார்த்தேன். உங்களைப் பிரமோஷன் செய்து டெல்லிக்கு ட்ரான்ஸ்பர் செய்திருக்கிறார்களே!

சாமி (அமைதியாக): நான் வேண்டாமென்று மறுத்து விட்டேன்.

தங்கம் (அதிர்ச்சியுற்று): நிஜமாகவா? ஏன் அப்படிச் செய்தீர்கள்?

சாமி: இன்னும் ஒரிரண்டு வருஷம்தானே? மூட்டை தூக்க வேண்டாமென்று பார்த்தேன். விட்டுவிடு! அந்தப்பதவி சேஷாத்திரிக்குக் கிடைக்கப் போகிறதாம். ரொம்பத் திருப்தி எனக்கு.

தங்கம்: தியாகம் செய்துவிட்டதாநினைப்போ? (திடீரென்று ஏதோ நினைத்துக் கொண்டு விசும்பி விசும்பி அழுகிறாள்.)

சாமி: ஐயய்ய என்ன இது! அழாதே....ம் நேற்று சந்திர சேகர் வந்திருந்தார். தோட்டம் ரொம்பப் பிரமாதமா இருக்கிறதென்றார். கேரட், உருளைக் கிழங்கு மாதிரி வகைகூட வைக்கலாமே என்று சொன்னார்.

தங்கம் (விடாமல் தொடர்ந்து): ஏன் நீங்கள் பிரமோஷனை விட்டீர்கள், சொல்லுங்கள்.

சாமி: நம் தோட்டத்தை ஒரு லட்சியத் தோட்டமாக மாற்ற வேண்டுமென்று ஆசைப்படுகிறேன். வெளியூர் எல்லாம் போனால் முடியுமா, சொல்லு.

(தங்கம் ஒரு பெருமூச்சு விடுகிறாள்.)



## காட்சி 3

(சங்கர் திருநெல்வேலியிலிருந்துவந்து பத்து நாட்கள் ஆகியிருக்கலாம்.)

சாமி: என்னடா சங்கர், நான் சொன்ன 'ஃபார்ம்' லேதானே தென்னை வாங்கினே?

சங்கரன்: ஆமாம், ஏன்?

சாமி: நர்சரிக்காரனைக் கூப்பிட்டுக் காண்பித்தேன். வெரைட்டி நல்லதில்லை என்கிறான்.

சங்கர்: தன்னோட நர்சரியிலே வாங்கலே என்பதற்காகச் சொல்கிறானோ,என்னவோ! பார்த்துக் கொண்டே இருங்கள். மளமள வென்று சீக்கிரமே வளரப் போகிறது. (திரும்பி) அம்மா! நீ பார்த்தாயோ?

தங்கம்: நீதான் பத்திரமாகக் குழந்தையைக் கொண்டு வரமாதிரி எடுத்து வந்திருந்தாயே!

சங்கரன் (புன்னகை செய்து): அப்பா! உங்களிடம் ஒன்று கேட்கணுமென்றிருந்தேன்.

சாமி: தாராளமாகக் கேள். அடடா! மரம் வைத்தவன் தண்ணீர் ஊற்றுவான் என்பார்கள். நான் மறந்து விட்டேனே!

(தண்ணீர் வாளியுடன் தோட்டப் பக்கம் போகிறார்.)

சங்கரன் (அவரைப் பின் தொடர்ந்து): என்னப்பா இது? மடத்தனம் செய்து விட்டீர்கள்! வந்த பிரமோஷனை யாராவது விடுவார்களா?

சாமி: போடா! எனக்கு எல்லாம் தெரியும்.



## காட்சி 4

(அமெரிக்காவிலிருந்து பெண் ரமா வருகிற நாள் கிட்டி வருகிறது.)

சாமி: ரமா என்ன எழுதியிருக்காள் தெரியுமோ?

தங்கம்: என்னவாம்?

சாமி: தோட்டத்தைப் பற்றி ஒரு புஸ்தகம் 'கலர்ஃபுல்' போட்டோக்களுடன் இருக்கிறதாம். உனக்காகவே கொண்டு வரப் போகிறாளாம். உனக்கு ரொம்ப உபகாரமாக இருக்குமாம்.

தங்கம் (சோர்வாகப் புன்னகை செய்து): எனக்கா? ஹும்....

சாமி: வந்து... கோவா பீன்ஸ் போடலாமென்றிருக்கிறேன். உன் அபிப்பிராயம் என்ன?

# கூந்தலுக்குச் சாயம் பூசுவது பற்றி எல்லா விவரங்களும் உங்களுக்குத் தெரிய வேண்டுமா?

## மகிழ்வோடு விடையளிக்கக் காத்திருக்கிறது

## *கோத்ரெஜ்*

இளம் வயதில், சில சமயம், சற்று முன்னதாகவே நரை தோன்றி விடலாம். அந்த சமயம் ஒவ்வொருவர் ஒவ்வொரு மாதிரி நடந்து கொள்வார்கள். சிலர் அதை விளையாட்டாக எடுத்துக் கொள்வார்கள், சிலர் அதைப் பெரிது படுத்துவார்கள். ஆனால் பெரும்பாலோர் அதற்காக ஒன்றுமே செய்வதில்லை. வருந்தத்தக்க விஷயம். காரணம், நரைத்த கூந்தலைக் கருமையாக்கி விடலாம்—மிக மிக எளிதாக.

**கே: எப்போது கூந்தலுக்குச் சாயமேற்றத் தொடங்க வேண்டும்?**

ப: முதன்முதல் நரை இழைகள் தோன்ற ஆரம்பித்த உடனேயே பூசுவதுதான் சிறந்தது.

**கே: தொடர்ந்து கூந்தலுக்குச் சாயமேற்றி வந்தால், அது கேசத்தைப் பாதிக்கும் என்பது உண்மையா?**

ப: இல்லை. ஆனால் நீங்கள் சிறந்த ஹேர் டையைத் தேர்ந்தெடுக்க வேண்டும். கோத்ரெஜ் ஹேர் டையில் சேர்க்கப் பட்டுள்ள விசேஷப் பொருட்கள் கூந்தலுக்கு உருக் கொடுப்பதோடு அதில் உள்ளடங்கியுள்ள கண்டிஷனர்கள், உங்கள் கூந்தலை அழகாகவும் பளபளப்பாகவும் வைத்திருக்க உதவுகிறது.

**கே: அது சருமத்தைப் பாதிக்குமா?**

ப: பொதுவாக பாதிக்காது. ஆயின், முதலில் ஒரு சிறிய சருமப் பரிசோதனை செய்து பார்த்து விடுவது நல்லது. எந்த சிறந்த ஹேர் டையுடனும் இப் பரிசோதனையை எப்படிச் செய்வது என்ற குறிப்புகள் இருக்கும்.

**கே: பர்மனெண்ட் ஹேர் டை எத்தனை நிரந்தரமானது?**

ப: சாயமேற்றிய கூந்தலில் பல வாரங்கள் சாயம் நீடித்திருக்கும். ஆயினும் புதிய கேசம் முளைக்கத் தொடங்கிய உடனேயே மூன்று அல்லது நான்கு வாரங்களுக்குப் பின்னர் நரை முடிகளை மீண்டும் சாயமேற்ற வேண்டும்.

**கே: டையின் சாயம் துணிகளையோ தலையணைகளையோ கறைப்படுத்துமா?**

ப: நிச்சயமாக இல்லை. இதர பெரும்பான்மையான ஹேர் டைகள் போல, கோத்ரெஜ் ஹேர் டை கூந்தலில் மேற் பூச்சாக சாயமேற்றுவதில்லை. அது கேசத்தின் அடிவேரினுள்ளே ஊடுருவிச் சென்று தங்குகிறது.

**கே: கூந்தலுக்குச் சாயமேற்றிய பின்னர், என் கேசத்தைச் சாதாரண கேசம் போல் நடத்தலாமா?**

ப: நிச்சயமாக, ஷாம்பூ உபயோகித்து, கூந்தலை அலசலாம். எந்த ஹேர் ஆயிலையும் க்ரீமையும் உபயோகிக்கலாம்.

**கே: வீட்டிலேயே கூந்தலுக்குச் சாயமேற்றுவது எளிதா?**

ப: சந்தேகமே வேண்டாம். உபயோகிக்க மிக மிக எளிது கோத்ரெஜ் ஹேர் டை: டையை மென்மையாகத் தடவினால் போதும். அது தானே சமமாகவும் சீராகவும் எளிதாகச் சருமத்தின் ரோமக்கால்களிடையே ஊடுருவிப் பரவுகிறது.

CMGS-81-175 TM

**கே: எல்லா ஹேர் டைகளுமே உபயோகிக்கக் கடினமா?**

ப: அப்படிச் சொல்ல முடியாது. கோத்ரெஜ் ஹேர் டை உபயோகிக்க வசதியானது. இனிய நறுமணம் கொண்டது. மிக மென்மையானது.

**கே: அது மிக விலையுயர்ந்ததா?**

ப: தோள் அளவு கூந்தல் உங்களுக்கு இருந்தால் ஒரு குப்பி ஹேர் டையும் டெவலப்பரும் கிட்டத்தட்ட மூன்று மாதங்கள் வரும். அதுவும் நீங்கள் வீட்டிலேயே சாயமேற்றிக் கொண்டால் மாத மொன்றுக்கு சுமார் ரு. 3/- செலவாகும்.

**கே: சாயமேற்றியபின் என் கூந்தல் இயற்கையான கருமை நிறம் பெறுமா?**

ப: நிச்சயமாக, ஆனால் உங்கள் கூந்தலின் இயற்கையான நிறத்திற்கு ஏற்ற வண்ணத்தைத் தேர்ந்தெடுக்க வேண்டும். உங்கள் கூந்தல் இள நிறமுடையதாக இருந்தால் கோத்ரெஜ் கரும் பழுப்பு ஹேர் டையை உபயோகிக்கவும்.




**கோத்ரெஜ்**

பர்மனெண்ட் ஹேர் டை

இதர ஹேர் டைகளை பிரதியமைகளாக்கி விட்டது.

ஆண்களுக்கும் பெண்களுக்கும் கூட இயற்கையான கருமை, கரும்பழுப்பு.

# காவல் கடவுள்!

லக்ஷ்மன்

**ஊ**ருக்கு மேற்கே தென்னந் தோப்பின் நடுவே அமைந்திருந்தது அந்தச் சின்னஞ்சிறிய கோவில். அந்த ஊருக்கு வருகிறவர்கள், தோப்புக்கு மேல்புறம் ஓடிய பெரிய சாலே பஸ் நிறுத்தத்தில் இறங்கி, கோவிலே வலம் வந்து தான் ஊருக்குள் நுழைய வேண்டும்.

கோவில் வாசலில், காலொடிந்த சிங்கச் சிலேயும் பலிபீடமும் சூலிலே வேலும் என்னெய் வழிய நின்று கொண்டிருந்தன. பலிபீடத்தின் மீது செவ்வரளிப் பூக்கள் சிதறிக் கிடந்தன. என்ணெய்ப் பசையில் கலந்து இரத்தப் பொட்டுக்களாய் அதன் மேனியில் அங்கங்கே குங்குமம் காட்சி யளித்தது.

இந்தச் சூழ்நிலேயும், காற்றில் சலசலக்கும் தென்னே மரங்களும் கோவிலுக்கு வருபவர் களுக்கு உள்ளே நுழையுமுன்பே, ஒருவகை, பய உணர்ச்சியை ஏற்படுத்திக் கொண் டிருந்தன.

நுழை வாசலில் திருவாசி போல் பதிக்கப் பட்டிருந்த தகட்டில் வரிசையாக இருக்கும் அகல் விளக்குகள் எல்லாம் எப்போதோ ஏற் றப்படுவது உண்டு. உள்ளே கருவறையில் இருக்கும் குத்துவிளக்கு மட்டும் எப்போதும் எரிந்து கொண்டிருக்கும். அதன் தண்மை யான ஒளியில், கம்பீரமாக வீற்றிருக்கும் பவானியம்மனின் கண்கள் பளபளக்கும்! அம்மனின் முகப் பொலிவும், புன்னகையும் பார்ப்போர் மனத்தைப் பரவசப்படுத்தும்.

அவள் அந்த ஊரின் காவல் தெய்வம்.

ஊர் மக்களின் நம்பிக்கையைச் சுமந்து கொண்டு அமைதியாய் அவள் அங்கே சிரித்துக் கொண்டிருந்தாள்.

அவளிடம் சொல்லிக் கொண்டு ஊர்மக்கள் செய்யும் நல்ல காரியங்களுக்கும் அவளிடம் சொல்லிக் கொள்ளாமல் பயந்து திருட்டுத் தனமாய்ச் சிலர் செய்யும் தீச் செயல்களுக் கும் ஊரின் நுழை வாசலில் அவள் சாட்சி பூதமாக அமர்ந்து புன்னகை புரிந்து கொண் டிருந்தாள்.

அவளது பொருள் புரியாப் புன்னகையின் பொலிவில் அந்த ஊர் இயங்கிக் கொண் டிருந்தது.

**பொ**ழுது புலர்ந்து விட்டது.

காலேச் சூரியனின் பொற் கிரணங்கள் பவானியம்மன் கோயில் விமான கலசத் துக்குப் புத்தொளி பூசிக் கொண்டிருந்த அந்த வேளையில் கோவில் வாசலில் வந்து நின்றது படகு போன்ற ஒரு கார்.

திரைபோட்டு, அம்மனுக்கு அபிஷேகத்தை முடித்து விட்டு, அலங்காரம் செய்து கொண் டிருந்த குருக்கள், கார் வந்து நிற்கும் சத்தம் கேட்டு, திரையை விலக்கிக் கொண்டு எட்டிப் பார்த்தார்.

காரிலிருந்து மாணிக்க வாசகம் பிள்ளையும் அவரது குடும்பமும் இறங்கி வந்து கொண் டிருந்தார்கள். அவசரம் அவசரமாக அம்ம னுக்கு அலங்காரத்தை முடித்து விட்டு, திரை யைத் திறந்து கொண்டு குருக்கள் வெளியே வரவும், வெளிப் பாதையைக் கடந்து அவர்கள் பீடத்தருகே வருவதற்கும் சரியாக இருந்தது.

''வாங்கோ....!''

சரிகை அங்கவஸ்திரத்தை இடுப்பில் சுற் றிக் கொண்டு, ஒரு புன்னகையை உதிர்த்து வைத்தார் மாணிக்கவாசகம் பிள்ளே.

அவர் மனைவி, கையில் கொணர்ந்திருந்த பூக்கூடையைக் குருக்களிடம் கொடுத்தாள்.

''சீக்கிரம் ஓர் அர்ச்சனே பண்ணுங்கோ, குருக்களே...! மதுரை வரையில் அவசரமாகப் போகணும்....!''

''இதோ....!'' — என்று உள்ளே ஓடினூர் குருக்கள்.

சற்றைக்கெல்லாம் கம்பீரமான அவர் குரல் இராகத்துடன் ஒலித்தது.

மாணிக்கவாசகம் பிள்ளேயின் கண்கள் அம்மன் சிலேயையே கவனித்துக் கொண்டிருந் தாலும் அவர் மனம் மட்டும் கட்டுக் கடங் காமல் தறிகெட்டு ஓடிக் கொண்டிருந்தது. அவரால் அதைப் பிடித்திழுத்து ஒருமுகப் படுத்த முடியத்தான் இல்லே.

அவரை இந்த நிலேக்கு ஆளாக்கி விட்ட துரைசாமி அய்யரின் பெண்ணுக்கு நாளே மதுரையில் கல்யாணம். அவரே நேரில் வந்து அழைத்து விட்டுப் போயிருக்கிறூர். ஆகவேதான் குடும் பத்துடன் கிளம்பி விட்டார் மாணிக்க வாசகம் பிள்ளே. திரும்புவதற்கு எப் படியும் இரண்டு மூன்று நாட்கள்



ஆகும். இந்த இரண்டு, மூன்று நாட்களுக்கும் வீட்டைப் பூட்டி விட்டு வெளியூர் செல்ல வேண்டியிருக்கிறதே என்பதுதான் அவரது கவலையெல்லாம்.

மூத்த மகன் குற்றாலம் வீட்டைப் பார்த்துக் கொண்டு தங்கியிருக்கலாம்! இத்தனை நாட்களாக அவர் பேச்சைக் கேட்டுக் கொண்டிருந்தவன்தான் அவன். சமீபத்தில் அவனுக்குக் கல்யாணமாகியிருந்தது. துரைசாமி அய்யர் வீட்டுக் கல்யாணத்துக்குப் போகிற சாக்கில் கொடைக்கானல், கன்னியாகுமரி எல்லாம் சுற்றிவிட்டு வரத் திட்டம் போட்டு விட்டாள் அவன் மனைவி. போதாக்குறைக்கு, அய்யர் வந்திருந்த போது அவனைப் பிரத்தியேகமாக அழைத்து விட்டுச் சென்றிருக்கிறார். அவன் கிளம்பி விட்டான்!

மற்றவர்கள் சின்னவர்கள். அவர்களை விட்டு விட்டுப் போக முடியாது. என்ன செய்வது.....?

அக்கம் பக்கத்திலுள்ள ஊர்களிலெல்லாம் சில மாதங்களாக ஒரே திருட்டு பயம்!

சிரமப்பட்டு அவர் எப்படி எப்படியோ சம்பாதித்து வைத்திருக்கிறார்.

''பவானியம்மா....!'' என்று உரக்கவே பெருமூச்சு விட்டார். மாணிக்கவாசகம் பிள்ளை.

''நாங்க ஊருக்குப் போயிட்டு வரோம். வீட்டை நீதான் காவலிருந்து பார்த்துக்கணும். பொன், பொருள் ஏதும் திருட்டுப் போயிடாமெ கவனிச்சுக்கோ தாயே....!! திரும்ப வந்ததும் உனக்குப் பால் அபிஷேகம் செய்து வைக்கிறேன்!''

அர்ச்சனை முடிந்து தீபாராதனை காட்டிக் கொண்டிருந்தார் குருக்கள்.

கற்பூர தீபத்தின் ஒளியில் அம்மன் அவரைப் பார்த்துப் புன்னகை செய்வது போல் இருந்தது.

மாணிக்கவாசகம் பிள்ளை திருப்தியுடன் கன்னத்தில் போட்டுக் கொண்டு அம்மனைக் கும்பிட்டார்.

வெற்றிலை பாக்குப் பழக்கூடையைக் கொணர்ந்து கொடுத்தார் குருக்கள். அதை வாங்கிக் கண்களில் ஒற்றிக் கொண்டு, மனைவியின் கையில் கொடுத்தார் பிள்ளை.

உள்ளே, ஆடாமல், அசையாமல் எரிந்து கொண்டிருந்த குத்துவிளக்குச் சுடரொளியில் அம்மன் அவரையே பார்த்துக் கொண்டிருப்பது போல் அவருக்குத் தோன்றியது.

ஓர் ஐந்து ரூபாய் நோட்டைக் குருக்கள் நீட்டிய தட்டில் மகிழ்ச்சியுடன் வைத்தார் பிள்ளை.

''அம்பாளுடைய சக்தியை நான் சொல்லித்தான் தெரியணும்னு இல்லே. உங்களுக்கே தெரியும். கவலைப்படாமப் போங்கோ....!''

பெரும் போக்காக ஒரு சிரிப்பை உதிர்த்தார் பிள்ளை. வாசல் வரையில் வந்து வழியனுப்பி வைத்த குருக்கள், கார் கிளம்பிச் சென்ற பிறகுதான் உள்ளே திரும்பினார்.



# அன்பின் ஆத்திரம்!



1936ம் ஆண்டு. இந்திய தேசிய காங்கிரஸின் லக்னோ மாநாட்டில் ஜவாஹர்லால் நேரு தலைமை உரை நிகழ்த்தினார். அது கிட்டத்தட்ட நூறு சத விகிதம் ஒரு மார்க்ஸிய உரையாகவே இருந்தது. தொடர்ந்து நடைபெற்ற விவாதத்தில் பாபு ராஜேந்திர பிரசாத் கலந்து கொண்டு பேசும்போது ஜவாஹர்லாலின் உரையைக் கடுமையாக விமரிசித்தார்.

மாநாட்டுப் பந்தலை விட்டு நானும் ஜே. பி.யும் வெளியே வந்தோம். ராஜேந்திர பாபுவின் உரையால் மிகவும் கோபமடைந்திருந்த ஜே. பி., "ஜவாஹர்லாலின் 'ஷூ'க்களைத் துடைக்கக் கூட ராஜேந்திர பாபுவுக்கு யோக்கியதை இல்லை" என்று ஒரு நண்பரிடம் கத்தினார். கூடவே அவ்வார்த்தைகள் அளவுக்கு மீறியன என்ற எண்ணம் அவருள் வளர்ந்தது.

ஜே. பி. ரொம்ப வேதனைப்பட்டார். சாப்பிடவே இல்லை. நேரே ராஜேந்திர பாபுவிடமே சென்று நடந்ததைக் கூறி மன்னிப்புக் கோரலாம் என்று நான் யோசனை சொன்னேன். அதன்படியே பாபுவைச் சந்தித்தார் ஜே. பி. விஷயத்தைச் சீரியஸாக எடுத்துக் கொள்ளாமல் மறந்துவிடும்படி சொன்னார் பாபு. ஆனால் கதை அதோடு முடிய வில்லை.

மறு நாள் காலை. நான்கு மணிக்கெல்லாம் நடைபெற்ற காந்திஜியின் பிரார்த்தனைக் கூட்டத்துக்குத் திடீரென்று சென்றார் ராஜேந்திர பாபு. அவரைக் கண்ட காந்திஜி, "இந்த விடியற்காலையில், அதுவும் ஆஸ்துமாவுடன் ஏன் இவ்வளவு தூரம் வந்தீர்கள்?" என்று வினவ; இரவு முழுவதும் தமக்குத் தூக்கம் இல்லை யென்றும், தமக்கு வழி காட்ட வேண்டும் என்றும் கேட்டுக் கொண்டார் பாபு.

லக்னோ மாநாட்டில் தாம் பேசிய பேச்சு எந்த அளவுக்கு ஜவாஹர்லாலைக் கடுமையாகத் தாக்கி அமைந்திருந்தால், தம்மைப் பற்றி இவ்வளவு மோசமான வார்த்தைகளைப் பிரயோகிக்கும் அளவுக்கு ஜே. பி.யின் மனம் புண்பட்டிருக்கும் என்று அவர் சங்கடப்பட்டதே அவரது அமைதியின்மைக்கும் தூக்கமின்மைக்கும் காரணம்.

இதை யெல்லாம் புரிந்துகொண்ட காந்திஜி, அவருக்கு ஆறுதல் கூறி அனுப்பி வைத்தார்.

- மினு மஸானி

பவன்ஸ் ஜர்னலிலிருந்து எடுத்தளித்தவர்
ராணிமைந்தன்

---

அம்மன் புன்னகை புரிந்து கொண்டிருந்தாள்.

'இந்தப் புன்னகையின் பொருள் யாருக்குப் புரிகிறது....' என்று நினைத்துக் கொண்டார் குருக்கள்.

● ● ●

மூன்றாம் பிறைச் சந்திரன், இரவு பிறந்து சில கணங்களுக்குள்ளேயே மேற்கில் மறைந்து விட்டான்.

விண்மீன்கள் கண் சிமிட்டி இரவுடன் விளையாடிக் கொண்டிருந்தன.

தென்னை மரத்தின் இலைகளுடன் சளசளவென்று என்னவோ பேசிக் கொண்டிருந்தது காற்று.

அந்திக் காலப் பூஜையை முடித்துக் கொண்டு கம்பி அழிக் கதவைச் சாத்திப் பூட்டிவிட்டு எப்போதோ குருக்கள் வீட்டுக்குப் போய்விட்டார்.

கம்பிகளின் இடைவெளி வழியாக, அணையாவிளக்கின் சிற்றொளியில் அம்மனின் முகம் தெரிகிறது.

இரவு வளர்ந்து வளர்ந்து நடுச் சாமத்தை எட்டும் வேளையில் கம்பிக் கதவுக்கு அருகில் வெளியே நிழலாடுகிறது.

'அ...ம்...மா...!',

சுடரொளியில் அம்மனின் கண்கள் பளபளக்கின்றன,

வெளியே கதவருகில் இருளில் நிற்பவனைப் பார்த்து அவள் புன்னகை செய்கிறாள்.

அவனுக்கு மெய் சிலிர்க்கிறது!

அவனைப் போலவே முரட்டுத்தனமாக வளர்ந்து மண்டிக் கிடக்கும் தலைமயிரை ஒரு கையினால் ஒதுக்கி விட்டுக் கொண்டு, அழிக் கம்பிகளின் மீது முகத்தைப் பதித்துக் கொண்டு உள்ளே பார்க்கிறான் அவன்.

'அம்மா....! எல்லாரும் எதெதுக்கோ உன்னை வேண்டிக்கிறாங்க..! அவங்க வேண்டுதலை எல்லாம் நீ நிறைவேத்தி வைக்கிறதா எல்லாரும் சொல்லுறாங்க. என் வேண்டுதலையும் நிறைவேத்திடு தாயே....!'

இருட்டுக்குப் பழகிவிட்ட கண்களுக்கு அம்மனின் கண்கள் பளபளக்கின்றன. இதழ்க் கடையில் புன்னகை நெளிகிறது.

'பண்ணையார் வீடு பூட்டிக் கிடக்குது....! நான் அங்கேதான் போறேன் இப்போ. ஆமாம். இருட்டத்தான்! சிரிக்காதே தாயே..., எனக்கு இந்த வேலை ஒண்ணுதான் தெரியும். இது என் தொழிலாப் போச்சு! நீ எனக்குத் துணையா இருந்து.....'

எங்கோ ஓர் ஆந்தை பயங்கரமாக அலறுகிறது. அவனுடைய முரட்டுச் சரீரம் கூடப் பயத்தில் உதறுகிறது.

**'நான் யாரு கையிலும் மாட்டிக்காமல் நீதான் தாயே காப்பாத்தணும்!...'**

அவன் இரைந்து வேண்டிக் கொள்ளவில்லை தான். ஆயினும் அவன் மனம் ஒவ்வொரு

சொல்வாக எண்ணிக் கோத்து முறையிட்டுக் கொண்டிருந்தது.

அவன் கண்களில் இலேசாகத் திரண்ட நீர் முத்துக்கள் உள்ளிருந்து வெளிப்பட்ட சிற்றொளியில் பளபளத்தன.

எண்ணெய் வழியும் அம்மனின் இரு விழிகளும் இதைப் பிரதிபலித்தன. அவளது கனிவான புன்னகை அவனுக்குத் தெம்பூட்டியது.

இருளில், தரையில், நெடுஞ்சாண் கிடையாக விழுந்து வணங்கிவிட்டு நம்பிக்கையுடன் வெளியே நடந்தான் அவன்.

• • •

**கா**லை வெளுத்தது.

சூரிய ஒளி, கோவில் வாசலில் கால் ஒடிந்த சிங்கத்தின் மீதும் பலிபீடத்தின் மீதும் கோலம் போட்டுக் கொண்டிருந்தது.

படியேறி வந்த குருக்கள், சாவியைப் பூட்டின் மீது இரண்டு முறை தட்டி விட்டுப் பூட்டைத் திறந்தார். அழிக்கதவை உள்ளே தள்ளித் திறந்துவிட்டு, கை கூப்பி அம்மனை வணங்கினார்.

''உங்களுக்கு விசயம் தெரியாதா குருக்களய்யா....?''

ஒருகணம் கண்ணை மூடிக் கொண்டு தியானத்தில் இருந்தவரின் கவனத்தை இந்தக் குரல் வாசற்புறம் திருப்பியது.



வாசலில் நமச்சிவாய ஓதுவார் நெற்றி நிறையத் திருநீற்றுடன் நின்று கொண்டிருந்தார்.

''என்ன ஓதுவாரே....?''

''மாணிக்கவாசகம் பிள்ளை மண்டையைப் போட்டுட்டார் குருக்களய்யா....!''

''என்னது.....?'' என்று பதறியவாறே பலிபீடத்தைத் தாண்டி வெளிப்புறம் வந்தார் குருக்கள்.

''நேத்துக் காலம்பர கோவிலுக்கு வந்து அர்ச்சனை பண்ணினாரே மனுஷன்! குடும்பத்தோடு மதுரை போறதாச் சொல்லிட்டுக் காரிலே போனாரே....!''

''அவர்தான் காரை ஓட்டிட்டுப் போனாராம். போற வழியிலே, மதுரைக்குப் பக்கத்திலே வண்டி மரத்திலே மோதி, அங்கேயே நெஞ்சுலே அடிபட்டு அவருக்கு மூச்சுப் போய் விட்டதாம்! வண்டியிலிருந்த வேற யாருக்கும் எந்தச் சேதமும் இல்லையாம்....!''

''அடப் பாவமே! அப்புறம்....?''

''அப்புறம் என்ன? பையன் கூடப் போய் இருந்தான். இல்லையா.... போலீஸ் கேஸ் எல்லாம் சமாளிச்சு ஆஸ்பத்திரிக்குப் போன சடலத்தைக் காரிலே போட்டுப் பாதி ராத்திரியே எடுத்துண்டு வந்துட்டானாம்....!''

''விதியை யார் தடுக்க முடியுது ஓதுவாரே!''

''வேடிக்கை என்னன்னா... பூட்டிக் கிடந்த வீட்டிலே இவங்க கார் வர்றதுக்கு முன்னாடிதான் பூட்டை உடைச்சுத் திருடன் புகுந்திருக்கான். கார் வந்து நின்னு ஆட்கள் இறங்கற சத்தம் கேட்டு, கொல்லைக் கதவைத் திறந்துண்டு ஓடிப் போயிட்டான். ஒரு பொருளும் களவு போகலையாம்! பிள்ளை உசிருதான் போயிடுச்சு. பாவம்!''

மனச் சங்கடத்துடன் உட்புறம் திரும்பி அம்மனைப் பார்த்தார் குருக்கள்.

அம்மன் புன்னகை புரிந்து கொண்டிருந்தாள்.

'இந்தப் புன்னகையின் பொருள் யாருக்குப் புரிகிறது!' என்று இப்போதும் நினைத்துக் கொண்டார் குருக்கள்.

## வோட்டுப் போட்ட நரிக்குறவர்கள்!

என் நண்பர் நாகரத்தினம் சமீபத்தில் நடந்த நாடாளுமன்ற தேர்தலில் திருவரம்பூர் பகுதியைச் சேர்ந்த ஒரு வோட்டுச் சாவடியில் பணி புரிந்தார். அங்கே தேவராயனேரியைச் சேர்ந்த நரிக்குறவர்கள் வோட்டுப் போட வந்தார்களாம். அவர்கள் தங்களுக்கு விசித்திரமான பெயர்கள் வைத்துக் கொண்டிருக்கிறார்கள். அவைகளில் இல: ஆரஞ்சு, இந்தியா, காங்கிரஸ். வாக்காளர் பட்டியலிலும் மேற்சொன்ன பெயர்களே இருந்தனவாம்!

- ரா. ராகவன்

# சில நேரங்களில் சில மனிதர்கள்

கதை என்று சொல்ல விசேஷமான கற்பனைச் சரக்குகள் எதுவும் இல்லை. சந்தர்ப்ப வசத்தினால் தன் பெண்மையை இழக்க நேர்ந்த கங்காவின் மனநிலையில் ஏற்பட்ட வளர்ச்சிதான் கதைக்கு வித்து. 'காம்ப்ரமைஸ்' செய்து கொள்ள முடியாமல் அவள் தவித்த தவிப்பு, முதன் முதலில் தன்னைக் கெடுத்தவனையே கண்டுபிடித்து அவனோடு வாழ நினைத்த அவள் நினைப்பு இதுதான் கதையின் மையக் கருத்து.

ஜெயகாந்தனின் யதார்த்தமான கதையின் யதார்த்தமான பாத்திரங்களாக நடிக்க நடிகர்கள் கிடைத்தது அதிசயம்தான். கதையில் வரும் அபலை கங்காவாக நடிக்க லட்சுமியை விடப் பொருத்தமான நடிகை வேறு யாரும் இருக்க முடியாது. கன மழையில் பிரபுவின் காரில் தன்னை இழந்ததிலிருந்து கங்காவின் பார்வையில் ஏற்பட்ட மருட்சி, அப்புறம் மனம் தேறி, உறுதிப்பட்டு அதன் பிறகு ஏற்பட்ட விரக்தி, அதற்குப் பிறகு பிரபுவைத் தேடிக் கண்டுபிடித்து அவனிடம் தன்னை ஈடுபடுத்திக் கொண்டு விட்டதில் ஏற்பட்ட மகிழ்ச்சி, கடைசியில், விவாகமாகி மூன்று குழந்தைகளின் தகப்பனான பிரபுவை மணந்து கொள்ள முடியாத நிலையில் ஏற்பட்ட சூன்ய நிலை — ஆகிய எல்லாக் கட்டங்களிலும் லட்சுமிக்கு இணை லட்சுமிதான் என்று பாராட்டுப் பெறுகிறார். அம்மாவிடம் பேசாதிருந்த நிலையில் கங்காவின் மன உறுதியை லட்சுமி மௌன நடிப்பிலே காட்டுகிறார்.

ஸ்ரீகாந்த் கொஞ்சம் வயதானவனாக வருகிறார். எதிலும் ஈடுபாடில்லாத, எதையுமே 'சீரியஸ்'ஸாக நினைக்காத ஓர் அபூர்வப் பிரகிருதி, பிரபு. கிடைத்த பெண்ணை நுகர்வது அவனைப் பொறுத்த வரையில் ஒரு சாதாரண நிகழ்ச்சிதான். கங்காவின் இரண்டாவது சந்திப்பு பிரபுவை மனிதனாக்கி விடுகிறது; அவனது இருதயத்தை நெகிழ்த்தி விடுகிறது. ஸ்ரீகாந்த் அருமையாக நடிக்கிறார்.

திரு ஒய். ஜி. பி. பழம் பெரும் நடிகர். நாடகங்களில் பிரதான பாகங்கள் ஏற்று நிறைய நடித்திருக்கிறார். இந்தப் படத்தில் 'சபலிஸ்ட்' மாமா ஒரு முக்கிய பாத்திரம். அதில் ஒய். ஜி. பி. தம்மை நிலைநிறுத்திக் கொண்டு விட்டார். அவரது நமுட்டு விஷமமான பேச்சும், சிருங்கார சேஷ்டைகளும், ஆரம்பத்திலேயே களை கட்டி விடுகின்றன. மிகவும் இயல்பாக நடிக்கிறார். கடைசியில் மனம் வருந்தி, கங்காவிடம் மன்னிப்புக் கேட்கும் தருணத்தில் ரசிகர்களைக் கண் கலங்கச் செய்து விடுகிறார்.

எழுத்தாளர் சர்மாவாக வரும் நாகேஷ், கங்காவின் அம்மாவாக வரும் சுந்தரி பாய்—இருவரும் திரைக் கதையின் முக்கியமான பாத்திரங்கள். இருவர் நடிப்பிலும் நம் மனம் நிறைவு பெறுகிறது.

இதுவரையில் பல ஃபார்முலாப் படங்களை இயக்கிப் புகழ் பெற்ற டைரக்டர் ஏ. பீம்சிங் முதல் தடவையாக ஒரு கலைப் படைப்பைச் சிறப்பாக இயக்கி யிருக்கிறார். ஒரு தமிழ் எழுத்தாளரின் கதை எவ்வித மாறுதலும் இல்லாமல் அப்படியே படமாக்கப் பட்டிருப்பதை நினைத்துப் பெருமைப்பட்டுக் கொள்ளலாம்.

வசனம் குறைவாக இருப்பதும், அநாவசியமான 'செட்' போடப்படாமல் இருப்பதும் பாராட்டுக்குரிய அம்சங்கள். ஆரம்பத்தில் கன மழையில் கார் போகும் காட்சி நல்ல முறையில் படமாக்கப் பட்டிருக்கிறது. கற்பழிப்புக் கண்ணறாவிக் காட்சிகளைக் காட்டாமல் 'சஜஸ்டிவ்' ஆகக் காட்டியிருப்பதை வரவேற்கலாம்.

விட்டல் ராவின் ஒளிப் பதிவு தரமாயிருக்கிறது. இரண்டு பாடல்கள் பின்னணியாக வருகின்றன. கதாசிரியர் ஜெயகாந்தனே வசனம் எழுதியிருக்கிறார். சுவையாகவும் அளவாகவும் இருக்கிறது.

சிந்திக்க வைக்கும் பிரச்னைப் படம்தான். பிரச்னைக்குரிய கதை அல்ல; வாழ்க்கைப் பிரச்னைகள் பற்றிய கதை. — காந்தன்





# சிலம்புச் செல்வம்

ம. பொ. சி.



கண்ணகி எப்படியெல்லாம் இருக்கிறாள் என்பதனை வருணிக்க நினைத்த வாயிலோன், முதலில் அவள் எப்படி யெல்லாம் இல்லை என்பதனை வருணித்துக் காட்டுகின்றான்:

''அடர்த்தெழு குருதி அடங்காப் பசுந்துணிப்
  பிடர்த்தலைப் பீடம் ஏறிய மடக்கொடி
  வெற்றிவேல் தடக்கைக் கொற்றவை
                                    யல்லள்;
  அறுவர்க்கு இளைய நங்கை; இறைவனை
  ஆடல் கண்டருளிய அணங்கு; சூர்உடைக்
  கானகம் உகந்த காளி; தாருகன்
  பேருரம் கிழித்த பெண்ணும் அல்லள்.''

''கொற்றவை போலிருக்கிறாள்'' என்று கூறி, ஆனால், ''அவள் அல்லள்'' என்று மறுக்கிறான். ''ஏழு கன்னியருள் இளையவளான பிடாரியைப் போலிருக்கிறாள்'' என்று கூறி, ''அவளும் அல்லள்'' என்று மறுக்கிறான். ''இறைவனுடன் போட்டியிட்டு நடனமாடிய பத்ரகாளியைப் போன்றிருக்கிறாள்'' என்று கூறிவிட்டு, பின்னர், ''அவளும் அல்லள்'' என்று மறுக்கிறான். ''பாலை நிலத்தை விரும்பிய—பார்ப்போரை அஞ்சச் செய்கின்ற —காளியோ?'' என்றால், ''அவளும் அல்லள்'' என்கிறான். ''தாருகா சூரனுடைய மார்பினைப் பிளந்த துர்க்கையோ'' என்றால், ''அவளும் அல்லள்'' என்று கூறி முடிக்கிறான்.

தனக்குத் தெரிந்து பக்தி செலுத்திய பயங்கரத் தோற்றமுடைய பெண் தெய்வங்களின் பெயர்களை யெல்லாம் ஒவ்வொன்றாகச் சொல்லிச் சொல்லி, அந்தத் தெய்வங்கள் அல்ல வந்திருப்பவள் என்று உறுதியாகக் கூறிவிட்டான். அதற்கு மேல், அரண்மனை வாயிலில் வந்திருப்பவளின் உண்மையான தோற்றத்தை வருணிக்கிறான் வாயிற் காவலன்:

'' செற்றனள் போலும்; செயிர்த்தனள்
                                    போலும்;
  பொற்றொடிச் சிலம்பு ஒன்று ஏந்திய
                                    கையள்;
  கணவனை இழந்தாள் கடையகத்தாளே!
  கணவனை இழந்தாள் கடையகத் தாளே!''

''நெஞ்சிலே பழி வாங்கும் நினைவு கொண்டவள் போலவும், ஆறாப் பெருஞ் சினத்தை வெளிப்படுத்தும் நிலையிலும் தோற்றமளிக்கிறாள். அழகிய வேலைப்பாடமைந்த பொன்னாலான ஒற்றைச் சிலம்பினைத் தன் கையிலே தாங்கியிருக்கிறாள். கணவனை இழந்தவளாம்! நமது அரண்மனையின் கடைவாயிலின் கண்ணே வந்து நிற்கின்றாள்.''

வாயிற் காவலனின் நீண்ட உரையை அமைதியாகக் கேட்ட மன்னன், முதலில், 'அவள் வருக' — ''அவள் இங்கே வரட்டும்'' என்று கூறினான். பின்னர், வாயிற் காவலன் மிகவும் பயந்து போயிருக்கிறான் என்பதனை மன்னன் உணர்ந்து கொண்டானாதலால், வந்திருப்பவளுக்கு மரியாதை காட்டி அழைத்து வரத் தவறி விடுவானோ என்று ஐயுற்று, ''தருக'' — அதாவது ''மரியாதை காட்டி அழைத்து வா'' என்றும் கூறுகிறான்.

வாயிற் காவலன் கண்ணகியை அணுகினான். மன்னனுடைய அழைப்பை வாயால் கூறாமல், மௌனியாகி, இரு கைகளையும் பணிவோடு நீட்டி அரண்மனைக்குள்ளே செல்லும் வழியைக் காட்டி, கண்ணகியை அழைத்தான்.

கண்ணகி அரண்மனைக்குள் சென்று மதுரை மன்னனின் எதிரே நின்றாள். அரசவைக்கு வருவதற்கு ஒரு மரபு உண்டு அல்லவா? அரசனைக் கண்டதும் முதலில் தலை தாழ்த்தி வணக்கம் செலுத்துவது குடி மக்கள் கடைப்பிடிக்க வேண்டிய ஒழுக்கமாகும். ஆனால், கண்ணகி அப்படிச் செய்யவில்லை. அந்த வீரத் தலைமகளின் தலை கொடுங்கோலனைக் கண்டதும் வணங்காதுதானே!

'' வாயில் வந்து கோயில் காட்டக்
   கோயில் மன்னனைக் குறுகினள்...''

என்பதால், மன்னனுக்குச் சற்றுத் தொலைவில் நிற்கும் மரியாதையைக் கூடக் கண்ணகி கடைப்பிடிக்கவில்லை என்பது புலனாகின்றது.

கண்ணகியின் தோற்றம் மதுரை மன்னனின் மனத்தை உருக்கி விட்டது. விரித்த கூந்தல், மதுரை வீதிகளிலே புரண்டழுத காரணத்தால் மேனி முழுவதும்புழுதி; விழிகளிலிருந்து இடையறாது ஒழுகும் கண்ணீர்; சினத்தால் துடிக்கும் உதடுகள்; வேதனையால் விம்முதலுற்ற முகம்! அவள் வடித்த கண்ணீர் கண்டு அவன் நடுங்கினான்.

''ஏழைகள் அழுத கண்ணீர் கூரிய வாள் ஒக்கும்'' என்ற பழமொழியைப் பாண்டியன் அறிவானாதலால், கண்ணகியின் கையிலுள்ள ஒற்றைச் சிலம்புக்குக் காரணம் கேட்காமல் அவளுடைய கண்ணீருக்குக் காரணம் கேட்க நினைத்து,

'' நீர்வார் கண்ணை எம்முன் வந்தோய்!
   யாரையோ,நீ? மடக் கொடியோய்?''

என்று கேட்டான். மன்னனுடைய வினா கண்ணகியின் சினத்தை அதிகரிக்கச் செய்து விட்டது. (தொடரும்)

(மயிலை இலக்கிய வட்டத்தில் நிகழ்த்திய சொற்பொழிவிலிருந்து)

Printed and published by V. Vaidyanathan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-600 031.
Managing Editor: T. Sadasivam. Associate Editor: K. Rajendran.

# புதிய ரெக்ஸோனா

## உங்கள் சருமத்தைப் பராமரிக்கிறது...

## மெருகு மிளிர வைத்திருக்கிறது.




இப்போது, எழில் கொஞ்சும் புது வடிவிலே, கையடக்கமாக வருகிறது புதிய ரெக்ஸோனா.
சருமப் பராமரிப்புக்கான நாலு இயற்கைத் தைலங்களின் கலவை அடங்கியுள்ளது: [illegible] (தேவதாரம்), கருவா, கிராம்பு, சாளம். மேனி மின்னக் குளித்தெழுவீர்...நீராடிய உங்கள் மீது நேரமெல்லாம் ரெக்ஸோனா மெல்லொளி மெருகு. காலமெல்லாம் ரெக்ஸோனா நறுமண உறவு. குளித்துப் பாருங்கள் இன்றே.

**புதிய ரெக்ஸோனா உங்கள் சருமத்திற்கு நல்லது.**

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு.

லின்டாஸ்–RX.74-303 TM

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Sri Lanka
இலங்கையில் விலை 75 சதம் (தபால் செலவு தனி)
மலேசியாவில் விலை (விமானப் பதிப்பு) 40 மலேஷியா காசு

கலியாணமே வைபோகமே! மங்கள வைபவங்களுக்கு
ஏற்ற புது டிசைன் பட்டுப் புடவைகளை அளிப்பது
சாரதா'ஸ். பெண்ணுக்குப் பெருமையும் எழிலும்
ஊட்டுவது சாரதா'ஸ் பட்டுப் புடவைகளே.
நாளுக்கு நாள் மாறிவரும்
புதுவித மோஸ்தர் பட்டுப்
புடவைகளை அறிமுகப்படுத்து
கிறது சாரதா'ஸ்.





# சாரதா'ஸ்

தன் பில்டிங்
மவுண்ட் ரோடு,
சென்னை-600 002
போன் : 87177

N.S.B. ரோடு,
திருச்சி-620 002
போன் : 27077

பனாரஸ் திருமண புடவைகள் புதிய டிசைன்களில் வந்துள்ளன.